# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 42 ]  துந்துபி ஆண்டு மாசித்திங்கள் 10-3-83  [ இதழ் 4

தருமையாதீனம்

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்



காசி ஸ்ரீ விசுவநாதருக்குப் பாலபிஷேகம் செய்து வழிபடுதல்

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

—[★]—

உனக்குப் பணிசெய்ய
உன்றனையெந் நாளும்
நினைக்க வரமெனக்கு
நீதா — மனக்கவலை
நீக்கின்ற தென்மதுரை
நின்மலனே எவ்வுலகும்
ஆக்கின்ற சொக்கநா தா.

— சில பிரதிகளில்
காணப்படும் பாடல் 4

ஆசிரியர் :-
வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :-
மகாவித்துவான்
சி அருணைவடிவேல் முதலியார்

உ
குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 42 | 10-3-83 | இதழ் 4

## உட்பொருள்



ஆண்டுச் சந்தா உள்நாடு ரூ. 12
ஆண்டுச் சந்தா சிலோன் ரூ. 23
ஆண்டுச்சந்தாவெளிநாடு ரூ. 25
ஆயுள் சந்தா உள்நாடு ரூ. 125
ஆயுள் சந்தா வெளிநாடு ரூ. 250

உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 42 | துந்துபி - மாசி - 10—3—83 | இதழ் 4

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினுய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே.

— ஞானசம்பந்தர்,

திருச்சிற்றம்பலம்

# "புதியதோர் உலகம் காண்போம்"

## சர்வதேச இளைஞர் ஆண்டு :

நிகழாண்டை சர்வதேச இளைஞர்கள் ஆண்டாகக்கொண் டாட வேண்டுமென 'யுனஸ்கோ' அறிவித்துள்ளது. சமூகத்தின் எல்லாத்தரப்பினரும் நம்பிக்கையுடன் உழைத்துச் சீராக வளர வேண்டுமென்பது 'யுனஸ்கோ' வின் எண்ணம். எல்லா உறுப் புக்களும் உரியவாறு வளர்ச்சி பெற்ருலன்றி அழகிய உடல் தோற்றம் அமையாது. இவ்வாறே, சமூகத்தின் முழுமையான வளர்ச்சியும் அளவிடப்படுகிறது. மனித குலத்தின் சரிபாதியாக விளங்கும் பெண்மையைச் சிறப்பிக்கவும், உடல்ஊனமுற்ருேர் களுக்கு நம்பிக்கையூட்டி, அவர்கள் நெஞ்சில் நிலவும் தாழ்வு மனப்பான்மையை அகற்றவும், உலகு தழுவிய 'சர்வதேச மகளிர் ஆண்டு' எனவும், 'சர்வதேச ஊனமுற்ருேர் ஆண்டு' எனவும், அடுத்தடுத்து அறிவித்துச் சிறப்பித்த நிறுவனம்,

சமூகத்தின் மிகப்பெரிய ஆக்க சக்தியாகவிளங்கும் இளமையைச் சிறப்பிக்க, அதன் பேராற்றலை உணரச்செய்ய இவ்வாண்டை சர்வதேச இளைஞர் ஆண்டாக அறிவித்திருப்பது பெரிதும் பொருத்தமுடையதேயாகும்.

## இளமையும் எழுச்சியும் :

மனிதவாழ்வைப் பலரும் பலவாருகப் பகுத்து ஆய்வர். சைவச் சான்ருேராகிய அப்பரடிகள் 'பாலனுய்க் கழிந்தநாளும், என்ற தேவாரத்தில் - குழந்தைப் பருவம் - குமாரப் பருவம்' முதுமைப் பருவம் என மனிதவாழ்வை மூன்ருகப் பகுப்பர். இளமைக்கு முற்பட்ட குழந்தைப் பருவம் அறியாமை மிக்கது, முதுமையோ இயலாமை மிக்கது: இடை நிற்கும் இளமை: ஆற்றலும் செயல் திறமும் மிக்கது. வாழ்வில் ஒரே முறை மட்டுமே அமையும் இளமையை உரியவாறு பயன்கொண்டு செயற்கரிய செயல்களைச் செய்து சிறக்க வேண்டும் என்பதனை நமது அறநூல்கள் பெரிதும் வற்புறுத்திக் கூறுகின்றன. அறிவு வளமும் - உடல்வலிவும் சிறந்திருக்கும் இளமையை - இளை யோர்களைத் தக்கவாறு சமூகத்திற்குப் பயன்படுத்திக்கொள் வதும் பயன்படுமாறு வழிகாட்டி உதவுவதும் அனைவருக்கும் உரிய கடமையும் பொறுப்புமாகும்.

## இளமையின் ஏற்றம் :

இளமை மகத்தானபேராற்றல்நிறைந்தது.இதனைத்தக்கவாறு பயன் கொண்டால் மகத்தான காரிங்களைச் சாதிக்கமுடியும் என்பர் காந்தியடிகள்! இளைஞர்களே வருங்கால சமுதாயத்தின் தூண்கள்: அவர்களை நம்பிக்கை இழக்கவைத்து விடாதீர்கள் என எச்சரிப்பர் சுவாமி விவேகானந்தர். ஏதென்ஸ் நகரத்து இளைஞர்களை முன்னிறுத்தியே சாக்ரடீஸ் மாபெரும் சமூக மாற்றத்தை உருவாக்கினர் என்பர். அறிஞர் 'ரூசோ'. உணர்ச் சியின் பிழம்பாக விளங்கும் இளமைப்பருவத்தைச் சிறந்த உள வியல் அறிவின்றி நெறிப்படுத்த இயலாது என்பர் உளவியல் அறிஞர். இவ்வாறு சிறப்பிக்கப்படும் இளைஞர்களைச் சமூகத் திற்குப் பயன்படும்வண்ணம் உருவாக்கும் பெருங்கடமை பெற்ருேர்களையும் ஆசிரியர்களையுமே பெரிதும் சார்ந்திருக்கிறது என்பர் டாக்டர். இராதாகிருஷ்ணன். இல்லத்தில் வழங்கப்படும் தூய அன்பும், பள்ளியில் வழங்கப்படும் நம்பிக்கையூட்டும் கல்வியுமே இளைஞர்களை உரியநெறியில் நடையிட உதவும். இவ்வகையில் குடும்பமும், பள்ளியும் சிறந்த சமுதாய நிலையங் களாக விளங்குகின்றன.

## நன்றுற்றலுள்ளும் தவறுண்டு! :

தவறுகளைத் தண்டனைகளால் திருத்த முடியும் என்பது ஒரு பொது நியதி. இந்நியதி இளைஞர்களைப் பொறுத்தவரை வெற்றி பெறுவதில்லை. 'நன்றுற்றலுள்ளும் தவறுண்டு அவரவர் பண் பறிந்து ஆற்றுக்கடை' என்பார் திருவள்ளுவர். சில இளைஞர் களிடம் காணப்படும் நெறிபிறழ்ந்த நடத்தைக்கோலங்களை ஆராய்ந்த உளவியலார் பெற்றோர்களின்கடுமையும், தண்டனை களுமே இவற்றிற்குக் காரணங்கள் என நிலைநாட்டியுள்ளனர். பெற்றோர்களின் அன்பும், உண்மையான அரவணைப்பும் இளமையின் எதிர்பார்ப்புக்கள் என்பர். நல்ல நண்பர்களைத் தேர்ந்துதருவது; உயர்பண்புகளை வளர்க்கும் வாழ்க்கைச் சூழல்களை இயன்றவரை உருவாக்கி வழங்குவது; முரண்பாடு காணப்படும்போது ஓரளவுவிரும்பியவாறுசெல்லஅனுமதித்துப் பின் தக்கநேரத்தில் தவறுகளைநினைவூட்டித் திருத்துவதுபோன்ற உளவியல்சார்ந்த நடைமுறைகளைப் பெற்றோர் அறிந்துவைத்து அதன்வழி திருத்தல் இன்றியமையாதது.

## இரண்டுங்கெட்டபருவம் :

மேலைநாட்டார்-குறிப்பாக ஆங்கிலேயர்கள் 13 வயதுமுதல் 19 வயது வரையிலான 7 ஆண்டுகளை "டீன்" (TEEN) ஏஜ் எனக்குறித்தாய்வர். இவ்வயதிற்குட்பட்ட இளைஞர்களைப் பெரிதும் கண்காணிக்கவேண்டுமென்பர். பிற்கால வாழ்வில் ஒருவரது நடத்தைகள் அமைவதெல்லாம்இந்தக்குறிப்பிட்ட ஆண்டுகளில் ஏற்படும் அனுபவங்களைச் சார்ந்ததாகவே அமையும் என்பர். இப்பருவத்தினர் – பாலப்பருவம் கடந்துவிட்டமையால் பெற் றோர் அன்பு குறைந்துவிடுமோ என்ற அச்சமும், உரியவளர்ச்சி எய்தாமையால் சமூகம் நன்கு மதிக்காது புறக்கணித்துவிடுமோ என்ற பயமும் சூழ்ந்தவராக விளங்குவர். இது ஓரளவு நடை முறை உண்மையாகவே காணப்படுகிறது. நீ என்ன இன்னும் பச்சைக்குழந்தையா எனப் பெற்றோர் பலர் பேசுவதையும், நீ சிறுபிள்ளை உனக்கு இவையெல்லாம்தெரியாதுபோ எனச் சமூகம் பேசுவதையும் காண்கின்றோம். இதை இரண்டுங்கெட்டான் நிலை என்பர். இந்நிலையில் இவ்விருசாராரும் இளைஞர்களுக்கு அன்பும் ஆதரவும் காட்டுதல் பெரிதும் வேண்டப்படுவது.

## சமூகப்பாதிப்புக்கள் :

ஈன்று புறந்தருதலைத் தாயின்கடமை எனவும், சான்றோனாக் குதலை தந்தையின்கடமை எனவும்; நன்னடை (சமூகஒழுக்கம்)

வழங்குதலே மன்னனின் கடமையாகவும்; வீரங்களேக்காட்டிப் போராடலே இளைஞர் கடமையாகவும் நமது தமிழ் நூல்கள் வரை யறுத்துக்காட்டின. இன்றைய அமைப்பில் வேறுபலஅமைப்புக் களும் இளைஞர் நடத்தைக்கோலங்களுக்குக் காரணமாகின்றன. அரசியல், திரைப்படங்கள் மற்றும், நாளிதழ், வார இதழ்கள் போன்றவற்றின் பாதிப்புக்கள் இளமையைப் பெரிதும் பாதிக் கின்றன. மற்றும் சாதிபேதம், சமூகப்பெருளாதார ஏற்றத்தாழ்வு களும் இவ்வகையில் பெரும்பங்கு வகிக்கின்றன. எனவே இத்தனைப்பாதிப்புக்களேயும்கடந்து இளமையின் உண்மை யான ஆற்றல்களைப் பரிணமிக்கச்செய்வது என்பது அரிதிலும் அரியசெயலாகவே அமைகிறது.

## புத்துலகுகாணப் புறப்படுவோம் :

இது சர்வதேச இளைஞர்கள் ஆண்டு. மொத்தமக்களில் இளைஞர்கள் முப்பதுவிழுக்காட்டினர். நாளையஉலகின் எல்லாச் சிறப்புக்களும் இவர்களைச் சார்ந்தே இருக்கின்றன. ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே செல்லும் வாயெல்லாம்செயல் என்றநெறிப்படி இளைஞர்களை உரியவாறு உருவாக்கும் மகத் தான பணியில் அனைவரும் உரிய பங்கேற்க இவ்வாண்டு வாயிலாக அமைகின்றது. நம்பிக்கையின்மையும் – எங்கே போகிறேம் என்றகுறிக்கோளற்ற பயணமும் – நமக்கு எது வேண்டும் என்பதையே தீர்மானிக்க இயலாத தடுமாற்றமும் இன்றைய இளைஞர்களைப் பற்றியிருக்கும் சமூக நோய்கள். பெற்றோர், ஆசிரியர், எழுத்தாளர்கள், அரசியல் வாதிகள்' கலைஞர்கள் என ஒவ்வொருவருக்கும் உன்னதமானகுறிக்கோள் மிக்க இளைஞர்களை உருவாக்குவதில் பெரும்பங்கு உண்டு. எதையோ எழுதி, எதையோ பேசி நம்மை வாழ்வித்துக் கொள்வது என்பது அறமாகாது. நமக்கும் குழந்தைகள் உளர். நாளைக்கு நமது எழுத்தும் பேச்சும் அவர்களையும் பாதிக்கும் என்ற தூயஉணர்வு அனைவருக்கும் பெருகுதல்வேண்டும். ஒளி படைத்த கண்களோடும், உரிமை கொண்ட நெஞ்சினேடும் புதியதோர் உலகம்காண. இளைஞர்களை ஏற்றமுறச்செய்ய இவ் வாண்டில் அனைவரும் உறுதிபூண்போம். உயர்வுகாண்போம்.

வாழ்க இளைஞர் நல்லாண்டு.

வளர்க இளைஞர் நல்வாழ்வு.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

திருமுதுகுன்றம்

அருள்மிகு விருத்தகிரீசுவரர் திருக்கோயில் திருப்பணித் தொடக்க விழாவில்

வழங்கியருளிய

# ஆசியுரை

17—1—1983

" கருமணியைக் கனகத்தின் குன்றொப் பானைக்
கருதுவார்க் காற்ற எளியான் தன்னைக்
குருமணியைக் கோளரவம் ஆட்டு வானைக்
கொல்வேங்கை யதளானைக் கோவணவன்றன்னை
அருமணியை அடைந்தவர்கட் கமுதொப் பானை
ஆனஞ்சும் ஆடியைநான் அபயம் புக்க
திருமணியைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே "

## பழமலையின் பெருமை :

திருமுதுகுன்றம் என்பது தமிழ்ப்பெயர்; விருத்தாலம் என்பது வடமொழிப்பெயர். இத்தலம் மிகப்பழமை வாய்ந்தது என்பது இதன் பெயராலேயே விளங்குகிறது. இதை விருத்த காசி என்றும் வழங்குவர். காசியை விட வீசம் அதிகம் என்றும் இதன் பெருமையைச் சிறப்பித்துக் கூறுவர். இங்கு மணிமுத்தா நதி திருக்கோயிலின் வடபால் உத்தரவாகினியாகச் ( வடக்கு நோக்கி ) சென்று கிழக்கே திரும்புகிறது. இது பற்றியே விருத்த காசி என்று இத்தலம் குறிக்கப்பெறுகிறது. இப்பகுதி இன்றும் புண்ணிய மடு என்று போற்றப் பெறுகிறது திருமுதுகுன்றம் என்பதாலேயே சுவாமி பழமலைநாதர் என்றும் விருத்தகிரீசுவரர் என்றும், அம்பாள் விருத்தாம்பாள் என்றும் பெரியநாயகி என்றும் போற்றப் பெறுகின்றனர். இது தேவாரம் அருளிய மூவராலும் போற்றி வழிபட்டுப் பதிகம் பாடப்பெற்ற சிறப்புடையது.

திருஞானசம்பந்தர், மணிமுத்தாநதி, திருக்கோயிலைவலமாக வருகிறது என்று குறிட்பிட்டருளுகின்றார். அந்நிலை இன்றும் காணத்தக்கது. "முழங்கொலிநீர் முத்தாறு வலஞ்செய்யும் முதுகுன்றத் திறையை..." என்பது அவர் அருளிய வாக்கு, திருஞானசம்பந்தர், "முக்கனியின் சாறொழுகிச் சேறுலரா நீள் வயல் சூழ் முதுகுன்றமே" என்று ஆயிரத்துமுந்நூறு ஆண்டு கட்டு முன்பு அருளியவாக்கு இன்றும் மெய்யாய்த்திகழ்கிறது.

## முப்பொருள் உண்மை :

திருஞானசம்பந்தர் இவ்வூர்த் திருப்பதிகம் ஒன்றில் சைவ சித்தாந்தம் உணர்த்தும் முப்பொருளுண்மையினை விளக்கி யருளுகின்றார். அக்கருத்து ஈண்டுச் சிந்திக்கத் தக்கதாகும். கடவுள், உயிர், உலகம் எனும் இம்மூன்றும் என்றும் உள்ள நித்தியப் பொருள்கள் என்பது சைவ சித்தாந்தத்தின் அடிப் படைத் தத்துவம். இக் கருத்தினை,

> "விளையாதோர் பரிசில்வரு பசு,பாச,வேதனை, யொண்
> தளை, யாயின தவிரவ்வருள் தலைவன், அதுசார்பாம்
> களையார்தரு கதிராயிரம் உடையவ்வ வனோடும்
> முளைமாமதி தவழும் உயர் முதுகுன்றடைவோமே"

எனும் பாடலால் விளக்கியருளுகின்றார். பசு என்பது உயிர், பாசம் என்பது ஆணவம்; வேதனை என்பது நல்வினை, தீவினை யாகிய கர்மங்கள்; ஒண்தளை என்பது மாயை. எனவே மும் மலங்களும் குறிக்கப்பெற்றன. 'தவிர அருள் தலைவன்', என்பதால் பதி குறிக்கப் பெற்றது. இங்ஙனம் உயிராகிய பசு, தம்மைப்பற்றி நிற்கும் பாசங்களாகிய தளைகளைத் தவிர்க்க அருளுகிறவன் தலைவனாகியபதி. இத்தகைய தலைவன்எழுந்தருளி யுள்ள திருமுதுகுன்றத்தை அடைந்து நாமும் நலம்பெறுவோம் என்கிறது இத்தேவாரப்பாடல். இதில் சைவசித்தாந்தத்தத்துவம் தெளிவாகக் குறிக்கப்பெற்றிருத்தலை நன்கு உணரலாம்.

இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் அருளிய திருப்பதிகங் கள் ஏழும், திருநாவுக்கரசர் அருளிச்செய்த திருத்தாண்டகப் பதிகம் ஒன்றும், சுந்தரர் அருளிய திருப்பதிகங்கள் மூன்றும் ஆகப் பதினொரு திருப்பதிகங்கள் உள்ளன.

## திருப்பணியின் சிறப்பு :

புராணச் சிறப்பும் வரலாற்றுச் சிறப்பும் உடையது இத் தலம். கற்பகமரமே வன்னிமரமாக வந்து பழமலைநகர் திருக் கோயில் திருப்பணி செய்தது என்பர். மேலும் சிவபெருமான், பிரமன் இவ்வுலகைப் படைக்குமுன்தாமே மலைவடிவாகிநின்று

பிரமன் அதனை அறியாது பலமலைகளையும் படைத்து அவற்றை நிலைபெறுத்த இடமின்றிமயங்கினன். அப்போது சிவபெருமான் பிரமன்முன் தோன்றித் தானே பழமலையாதலைத் தெரிவித் தருளினர் என்பது தலபுராணம்: சுக்கிராச்சாரியார், அகத்தியர், விபச்சித்து முனிவர் போன்ற முனிவர்களும் வழிபட்ட பெருஞ் சிறப்புடையது இத்தலம்.

விபச்சித்து முனிவர் போன்ற அருளாளர்களால் திருப்பணி செய்விக்கப் பெற்ற சிறப்புடைய இத்தலத் திருக்கோயில், சுமார் அறுபது ஆண்டுகட்கு முன்னர் வயிநாகரம் செட்டியார் குடும்பத்தினரால் பெருந்திருப்பணிசெய்து குடமுழுக்கும் நிகழ்த்துவிக்கப்பெற்றுள்ளது. 1944-ல் உபாயமாகத் திருப்பணி செய்து குடமுழுக்கும் நடந்துள்ளது. அதன்பின் பதினைந்து ஆண்டுகட்கு முன்பு இத்திருக்கோயில் திருப்பணி தொடங்கப் பெற்று அது இன்னும் நிறைவேருமல் இருந்துவருகின்றது. அத்திருப்பணி இங்குள்ள இறைபணிமன்ற அன்பர்களின் முயற்சியானும், திருவருள்வல்த்தாலும் மீண்டும் இன்று தொடங்கப்பெறுகிறது.

## எண்ணமே எல்லாவற்றிற்கும் அடிப்படை :

எந்தச் செயலும் இறைவன் அருளால் அன்றி நிகழாது. இதனை, 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது'என்று தாயுமானர் குறிக்கின்ருர். ஆட்டுவித்தால் யாரொருவர் ஆடாதாரே'' என்று அப்பர் பெருமானும் இக்கருத்திலேயே விளக்கியிருக்கின்ருர். ஒரு சில திருப்பணிகள் விரைவிலேயே நிறைவுபெறுகின்றன. ஒருசில திருப்பணிகள் தொடங்கப் பெற்றுப் பலகாலங்கள் ஆகியும் நிறைவுபெருமல் உள்ளன. இவற்றிற்கெல்லாம் காரணம் ஆங்காங்குள்ள மக்கள் மனேபாவமும் செயல்முறை களுமே ஆகும். மக்களின் மனநிலையை ஒட்டித்தான் இறைவன் திருவருளும்நிகழ்கிறது. எண்ணியது நிறைவேறவேண்டுமாயின் எண்ணம் சரியாகவும் முறையாகவும் இருத்தல் அவசியம் எனவே, நாடு நலமுற அமைய வீடு நலமுற அமைதல் இன்றியமையாததாகும். பல வீடுகள் சேர்ந்ததே ஊர். பல ஊர்கள் சேர்ந்ததே நாடு. எனவே வீடு திருந்தினல் நாடு திருந்தும். இங்கு வீடு என்பது அங்குவாழும் மனிதர்களையே குறிக்கும். எந்த நாட்டில் நல்லவர்களும், திறமையுள்ளவர் களும், நல்ல உழைப்பாளிகளும் இருக்கின்ருர்களோ அந்தந்த நாடும் ஊரும் நலம் பெறும் என்பது உண்மை. நல்லவர்களும் உழைப்பாளிகளும் இல்லாத நாடும் ஊரும் நலம் பெறுவது என்றும் இயலாது என்பது கண்கூடு.

**நாடு நல்லவர் வழியில் :**

எனவே நாடு எப்படி இருந்தாலும் அங்குவாழும் மக்களின் செயல் முறைகளால் அது உயர்வு பெறுவதும், தாழ்வு அடைவதும் நேருகிறது. இக்கருத்தையே ஔவையார் தம்புறப் பாட்டில் குறிக்கின்ருர். ஒரு நிலம் நாடாக இருந்தால் என்ன! காடாக இருந்தால் என்ன! அது மேடாக இருந்தால் என்ன! பள்ளமாக இருந்தால் என்ன! அந்நிலத்தில் வாழும் மக்கள் எவ்வளவில் முயற்சியும் உழைப்பும் உடைய நல்லவர்களாக இருக்கிருர்களோ அவ்வளவில் அந்நிலம் பெருமைபெறுகிறது என்று கூறுகிருர்.

> " நாடா கொன்ருே! காடா கொன்ருே!
> அவலா கொன்ருே! மிசையா கொன்ருே!
> எவ்வழி நல்லவர் ஆடவர்
> அவ்வழி நல்லை! வாழிய நிலனே! "

என்பது அப்பாடல். ஒரு நாடு சுபிட்சமாக இருந்தால் அந் நாட்டில் நல்லவர்கள் இருக்கின்ருர்கள் என்பது பொருள். இதனை மகாபாரதம் விளக்குகிறது.

**பாரதச்சான்று :**

பஞ்சபாண்டவர்களும் திரௌபதியும் சூதாட்டத்தின் வினை வினல் பன்னிரண்டு ஆண்டுகள் வனவாசம் இருந்துவிட்டுப் பின் ஓராண்டு மக்கள் யாரும் அறியாவகையில் நாட்டில் மாறு வேடத்தில்வாழத்தலைப்பட்டனர். அப்பொழுது தருமன்முனிவர் வேடத்திலும் பீமன் சமையல்காரன் வேடத்திலும் அர்ச்சுனன் பேடிவேடத்திலும் நகுலன் குதிரை ஓட்டுபவன் வேடத்திலும் சகாதேவன் ஆயர்குடியன் வேடத்திலும் திரௌபதி பணிப் பெண் வேடத்திலும் விராடதேசத்தில் வசித்துவரலாயினர். அவ்வமயம் துரியோதனன் தனது பங்காளிகள் பனிரண்டு ஆண்டுகள் வனவாசம் கடந்து இந்த ஓராண்டு மறைந்தும் வாழ்ந்துவிடுவார்களேயானல் அதன்பின்னர் அவர்கட்கு நாடு தரவேண்டியிருக்குமே ! அதனல், அவர்கள் மறைந்துவாழும் இத்தருணத்திலேயே அவர்களைக்கண்டுபிடித்துக் கொன்றுவிட் டால் துன்பமில்லை என்று எண்ணியவனய் நாடு முழுக்கப் பாண்டவர்களைத்தேடிக் கண்டுபிடிக்க ஆட்களை அனுப்பினன். யாரும் கண்டுவரவில்லை: எல்லோரும் கண்டுபிடிக்க இயல வில்லைஎன்றுகூறினர்கள். அப்பொழுது அவையிலிருந்தபீஷ்மர் துரியோதனனைப்பார்த்து, " நீ தேடுவதுபோன்று ஆட்களை அனுப்பினல் கண்டுபிடிக்க இயலுமா ? நான் ஒரு யோசனை கூறுகின்றேன் ! கேள் ! எந்தநாடு சுபிட்சமாகவும் நீர்வளம்

நிலவளங்களோடும் இருக்கிறதோ அங்கேதான் அந்த நல்லவர்கள் மறைந்து வாழ்கின்றூர்கள் என்பது பொருள்" என்று கூறினர். இக்கருத்து ஆழமாகச் சிந்திக்கத்தக்கது. பீஷ்மர் கூறியதுபோல நல்லவர்கள் வாழ்ந்தால் அந்நாட்டில் மழை வளமும் பிறவளங்களும் குறைவுபடா என்பது உறுதி. வாழும் மக்களின்மனநிலை கேடுற்ருல் நாடும் கேடுறும் என்பது பாரதம் கூறும் தெளிபொருள். இக்கருத்தினைத் திருமூலரும் தம் திருமந்திரத்திலும். கூறியருளுகின்ருர்.

## இன்பமும் துன்பமும் :

இன்பமும் துன்பமும் தானுக வருவதில்லை. நாம் நினைக்கும் நினைவு, பேசும்பேச்சு, செய்யும் செயல் இவைதூய்மையாயிருப்பின் இன்பமே வரும், இல்லையேல் துன்பமே வரும். இதனை நன்குணர்ந்து அரசன் அல்லது அரசு முறைசெய்யின் நாடு நலமுறும் என்பதில் ஐயமில்லை.

> " இன்பமும் துன்பமும் நாட்டா ரிடத்துள்ள
> நன்செயல் புன்செய லாலந்த நாட்டிற்காம்
> என்ப இறைநாடி நாடோறும் நாட்டினில்
> மன்பதை செப்பஞ் செயின் வையம் வாழுமே "

என்பது அத்திருமந்திரப் பாடல்.

இங்ஙனம் புறநானூறும், பாரதமும், திருமந்திரமும் ஒரே கருத்தையே பல வகையில் விளக்குகின்றன; வலியுறுத்தியும் கூறுகின்றன. எனவே ஒவ்வொருவனும் தான் நல்லவனுக இருந்தால் தான்வாழும் நாடும் ஊரும் வீடும் நலம் பெறும் என்பதனைச் சிந்தித்தாவது நல்லவனுக வாழ முற்படுதல் அவசியமாகும். தான் தீயனுக வாழ்ந்தால் பிறருக்குக் கெடுதல் என்றில்லாமல் அது மறைமுகமாகத் தனக்கும் தீங்கையே தருகிறது என்று சிந்தித்தல் மிகமிக இன்றியமையாததாகும்.

## பூஜைகள் தடைப்பட்டால் .. :

மேலும் நமக்கு இவ்வுடம்பைத்தந்து அதில் உட்கருவிகளையும்தந்து, உலவுதற்கு உலகினையும்ஈந்து, நாம்திருந்த இன்பத்துன்பங்களையும் கொடுத்து நம்மைக் காப்பாற்றுகின்றவன் இறைவன், அவ்விறைவனின் திருக்கோயில்களில் விளக்குப் போடக்கூட எண்ணெய் இல்லாமலிருப்பதும் அத்திருக்கோயிலில் தொடங்கிய திருப்பணிகள் சரிவர முற்றுப் பெறுமலிருப்பதும் நமக்கே தீங்கு தருவனவாகும் என்று சிந்தித்தல் இப்போதைய இன்றியமையாத் தேவையாகும். திருக்கோயிலில் பூஜைகள் தடைப்படின் அதனுல் நாட்டிற்கும் அரசிற்கும்

தீங்கே விளையும் என்று திருமூலர் ஒரு பாடலில் குறித்தருளுகின்ருர்.

" முன்னவனுர் கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குகள்; வாரி வளங்குன்றும்;
கன்னங் களவு மிகுத்திடும் காசினி;
என்னரு நந்தி எடுத்துரைத் தானே "

என்பது அப்பாடல். இன்று நாட்டில் மழைவளம் குன்றியிருப்பதற்கும் நீதி, நேர்மை அழிவதற்கும், களவும் பொய்யும் மிகுவதற்கும் இவற்ருல் மக்கள் அனைவரும் சொல்லொணுத் துயரங்களை அனுபவிப்பதற்கும் காரணம் திருக்கோயிலில் சரிவரப் பூஜைகள் நடைபெற இயலாமல் இருப்பதே ஆகும். அதற்குக் காரணமாக உள்ள நிலக் குத்தகைத்தாரர்கள் மனைப் பகுதி வாடகைதாரர்கள், கடைகட்டிட வாடகைதாரர்கள் அரசு சட்டம் எப்படியிருந்தபோதிலும் தன்னை வாழவைக்கும் இறைவன் திருக்கோயிலுக்குக் கொடுக்கவேண்டிய உரிய பொருளை பகுதியை - வாடகையை நியாயமாகக்கொடுக்கவேண்டும். கொடுக்காமல் ஏமாற்றத் தலைப்பட்டால் அடுத்த அடுத்த ஆண்டுகளில் இதுகூட நமக்கு இல்லாமல் போய்விடும். இந்தஉணர்விலாவது பயமும் பக்தியும் கொண்டு அளக்கவும். கொடுக்கவும் முன்வருதல் அவசியம்.

**வாழ்த்து:**

அங்ஙனம் செய்யின் அவர்கள் வழிபடும் திருக்கோயில்களிலும் பூஜைகள் சரிவரநடைபெறும். அதனுல் நாடும், நீர்வளம்நிலவளத்தில்மேலோங்கி இன்னும் பலன்களை நிறைவாகத் தரும் என்பதில் ஐயமில்லை. எனவே நின்றுபோன இத்திருக்கோயிலின் திருப்பணி சரிவரநடைபெற மக்களின் மனநிலையில் மாறுதல் அவசியம். அதற்கு இங்குள்ள அன்பர்கள் பரம் பொருளாம் பழமலைநாதரைப் பிரார்த்தித்து அம்மாறுதல் விரைவில் நிகழ வேண்டிக் கொள்வார்களாக! நாளும் எல்லோரும் பிரார்த்தனை புரிவோமாக. இப்புண்ணியப் பணியில் ஈடுபட்டுச் செயலாற்றிவரும் திருமுதுகுன்றம் இறைபணி மன்றத்தாரின் செயல் பாராட்டுதற்குரியது. திருப்பணி விரைவில் நிறைவேறவும் அதற்கு ஏற்ப மக்களின் மனநிலைமாற்றம் பெற்றுச்செயல் படவும் அனைவரும் நலம்பல பெற்று நீடு வாழவும் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றேம்.

வாழ்க நல்லவர்கள்.

வளர்க நல்லறங்கள்.

# மகாசிவராத்திரிச் சிறப்பு



தருமையாதீனத் தமிழ்ப்புலவர், திருவாசக உரைமணி,
**வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ.**

சிவன் என்ற சொல்லுக்குத் துக்கம் முதலியவற்றைப் போக்குபவன் என்பது பொருள். இராத்திரி என்றசொல்லுக்குச் சுகத்தைச் செய்வது என்பது பொருளாகும். எனவே இவ்விரு சொல்லும் சிவராத்திரி எனத் தம்முள் இணைந்து துக்கத்தைப் போக்கிச் சுகத்தைச் செய்வது என்ற பொருளோடு வழங்கப் படுவதை அறிந்தோர் உணர்வர். சிவராத்திரி சிவனை வழிபடும் இரவு என்ற பொருளும் கொள்ளப்படும்.

சிவராத்திரி, நித்யசிவராத்திரி, பக்ஷசிவராத்திரி, மாதசிவ ராத்திரி, யோகசிவராத்திரி எனப்பலவாமாதலின் சிறப்புடைய மாசிமாத சிவராத்திரியை மகாசிவராத்திரி (மகா – பெரிய) என வழங்குகின்றோம்.

மகாசிவராத்திரி மாசிமாதம் கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தசி திதி யன்று வருவது. இந்நாளில் அதிகாலையில்எழுந்துநீராடித்திருநீறு அணிந்து உருத்திராக்கமாலை பூண்டு சிவபூசை செய்து திருவைந்தெழுத்தை ஓதவேண்டும். நாள்முழுதும் உண்ணுமல் உபவாசம் இருத்தல் வேண்டும். மாலையில் மீண்டும் நீராடி சிவாலயங்களுக்குச் சென்று நான்கு காலமும் வழிபட்டு அஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்காரங்கள் செய்து நித்திரையின்றி யிருத்தல் வேண்டும். முடியுமானல் நெய்விளக்கு ஏற்றி மலரால் அருச்சனை செய்வித்து தேவார திருவாசகங்களைப் பாராயணம் செய்து சிவசிந்தனையோடு இருந்து மறுநாள் காலையில் நீராடி வழிபட்டுப் பாரணை புரிந்து விரதத்தை முடித்தல் வேண்டும்.

சிவபூசை செய்வோர் மேற்குறித்த விரதநியமங்களோடு இரவில் நான்குகாலங்களிலும் சிவபூசை செய்தல் வேண்டும். நான்குயாமபூசைகளையும் அவ்வக்காலத்தில் செய்வதுஉத்தமம். ஒரேகாலத்தில் சேர்த்துச் செய்வது மத்திமம். பரார்த்தம், ஆன் மார்த்தம் ஆகிய இரண்டுவழிபாட்டிலும் சிவராத்திரிநான்குயாம பூசையில் சூரியதேவர் முதலிய பரிவாரங்களுக்கும் சோமாஸ் கந்தர் முதலிய மூர்த்திகட்கும் பூசைசெய்ய வேண்டுவதில்லை.

பரார்த்தத்திலே (கோயில் வழிபாடு) மகாலிங்கம் முதலிய மூலமூர்த்திகளுக்கும் ஆன்மார்த்தத்தில் மகாலிங்கத்துக்கு மாத்திரமும் பூசைசெய்ய வேண்டும். இருவழிபாட்டிலும் விநாயகர் சண்டேசுவர் பூசைகள் நான்குயாமங்களிலும் செய்தல் வேண்டும்.

சிவராத்திரியில் உபவாசம் உத்தமம். நீரேனும் பாலேனும் உண்ணுதல் மத்திமம். பழம் உண்ணுவது அதமம். தோசை முதலிய பணிகாரங்கள் உண்பது அதமாதமம்.

சிவராத்திரி நாளில் இராத்திரியில் பதினன்கு நாழிகைக்கு மேல் (இரவு 11-30 மணி முதல்1 மணிவரை) ஒருமுகூர்த்தகாலம் இலிங்கோற்பவகாலம் எனப்படும். இவ்வேளையில் சிவதரிசனம் செய்வது உத்மோத்தமபுண்ணியம்.

சிவராத்திரி தினத்தில் நித்திரையொழிக்க இயலாதவர்கள் இலிங்கோற்பவகாலம் வரையுமாயினும் நித்திரையின்றி யிருந்து சிவதரிசனம் செய்தல் வேண்டும் எனக்கூறப்படுகிறது.

ஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்கள் இச்சிவராத்திரியைக் குறித்து இரண்டாம்சைவவினுவிடையில் குறித்துள்ள செய்திகள் இவை.

சிவராத்திரி நான்கு யாம பூசைக்குரிய அபிஷேகப்பொருள்களும் பூச்சும்: முதல்யாமகாலத்தில் பஞ்சகௌவியமும் சந்தனமும். இரண்டாம் யாமகாலத்தில்பஞ்சாமிர்தமும், அகிலும். மூன்ரும்யாமகாலத்தில் தேனும், பச்சைக்கற்பூரமும். நான்காம் யாமத்தில் கருப்பஞ்சாறும், குங்குமப்பூவும் சிறப்புடையன.

பத்திர புஷ்பங்கள் முதல்யாமத்தில் வில்வம் அல்லது தாமரை, இரண்டாம்யாமத்தில் தாமரை. அல்லது துளசி. மூன்ரும் யாமத்தில் சண்பகமலர், அல்லது சாதிமுல்லை.வில்வம், நான்காம் யாமத்தில் நந்தியாவர்த்தம் அல்லது நீலோற்பலம் சிறப்புடையன.

வில்வம், நொச்சி, மாவிலிங்கை, முள்கிளுவை, விளா இவை பஞ்சவில்வங்கள் எனப்படும்.

முதல்யாமத்தில் பயற்றன்னமும், (பொங்கல்) இரண்டாம் யாமத்தில் பாயசான்னமும், மூன்ரும்யாமத்தில் திலான்னமும், நான்காம்யாமத்தில் சுத்தான்னமும் நிவேதித்தல் வேண்டும்.

## இலிங்கோற்பவம் :

உலகைப்படைப்பவர் பிரமன். காப்பவர் திருமால். இருவருக்கும் தம்முள் யார் பெரியவர் என்பதில் கருத்து மாறுபாடு தோன்றியது. அப்போது அவர்களுக்கு உண்மை உணர்த்தச்

சிவபெருமான் திருவுளம் கொண்டார். இருவருக்கும் இடையே சோதிப்பிழம்பாய்த் தோன்றினர். அதைக்கண்டு இருவரும் தம்முள் வியந்து. இப்பிழம்பின் அடியையோ முடியையோ அறிபவரே பெரியவர் எனஓர் உடன்பாடு செய்துகொண்டனர். நான்முகன் அன்னமாய்ப்பறந்து திருமுடியைக்காணச் சென்றார். திருமால்பன்றியாய் நிலத்தை அகழ்ந்து சென்று திருவடியைக் காணப்புறப்பட்டார் இருவரும் அல்லற்பட்டு அடிமுடிகாணாது அயர்ந்து நம்மினும் பெரியவர் ஒருவர் உள்ளார், அவரே சிவ பரம்பொருள் என்ற உண்மையை உணர்ந்தனர்.

திருமால் பிரமர்பொருட்டு அனற்பிழம்பாய்த் தோன்றிய பெருமான், அவர்களுக்குச் சிவலிங்கத் திருவுருவாய்க் காட்சி தர அவ்விருவரும் அப்பரம்பொருளைச் சிவலிங்கவடிவில்பூசித்து நல்லருள் பலவும் பெற்றனர் என்று இலிங்கோத்பவ வரலாற்றைக் கந்தபுராணம் கூறுகிறது. சிவபெருமான் திருமால் பிரமர் பொருட்டு அனற்பிழம்பாய்ச் சிவலிங்க வடிவில் தோன்றிய நாளையே மகாசிவராத்திரி என்று வழங்குகின்றோம். இலிங்கம்+ உற்பவம் (வெளிப்பட்டது) இவ்விரு சொல்லும் இணைந்து இலிங்கோத்பவம் என வழங்குகிறது, திருமால் பிரமர் பொருட்டுப் பெருமான் சிவலிங்கத்தில் தோன்றியதை அப்பரடிகள் இலிங்கபுராணத் திருக்குறுந்தொகையில் அருளிச்செய்திருப்பதைக் காணலாம்.

> செங்க ணனும் பிரமனும் தம்முளே
> எங்கும் தேடித் திரிந்தவர் காண்கிலார்
> இங்குற் றேன்என்று இலிங்கத்தே தோன்றினன்
> பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே. — அப்பர்.

### உமையம்மை வழிபட்டது :

திருக்கயிலையில் உமையம்மை சிவபெருமானது இரண்டு திருக்கண்களை விளையாட்டாகப் பொத்தியபோது பல்லூழிக் காலம்உலகம் இருளால்மூடித் துன்புறநேர்ந்தது. அக்குற்றம்தீர அம்பிகை இரவு நான்கு யாமங்களிலும் சிவபெருமானை வழிபட்டுத் தம்குற்றம் நீங்கினர். அம்பிகையின் வேண்டுகோட்படி அன்றையநாளைச் சிவராத்திரி என வழங்கவும் அன்று தம்மை வழிபடும் அனைவர்க்கும் அருள்பல வழங்குதற்கும் இறைவன் இசைந்தருளினர். இவ்வரலாறும் கந்தபுராணத்தில் கூறப்பட்டுள்ளது.

### வேடனுக்கு அருள்புரிந்தது :

வேடன் ஒருவன் வேட்டையாடக் கானகம் சென்றான், பகல் முழுதும் அலைந்து திரிந்தான். விலங்கு எதுவும் கிடைக்கவில்லை. அன்றைய இரவை அக்கானகத்திலேயே கழிக்க

எண்ணினன். அருகில் ஒரு குளமும் கரையில் வில்வமரமும் அதனடியில் சிவலிங்கமும் காணப்பட்டன. வேடன் இரவில் புலிக்குப் பயந்து வில்வமரத்தில் ஏறிக்கொண்டான். உறங்காமல் இருக்க வில்வ இலைகளைப் பறித்து கீழே போட்டுக் கொண்டிருந்தான். வில்வ இலைகள் சிவலிங்கப் பெருமான் திருமுடியில் விழுந்தன. அன்றைய இரவு சிவராத்திரியாதலின் வேடன் பறித்துத் தம்முடிமேல் சிந்திய வில்வ இலைகளை அருச்சனையாக ஏற்றுஇறைவன் அவ்வேடனுக்கு அருள்பாலித்தார் என்பது சிவராத்திரி வழிபாட்டின் சிறப்பைத் தெரிவிக்கும் வரலாறு. வேடன் அறியாமல் செய்த அபுத்திபூர்வமான இச்செயலுக்கே இறைவன் அருள்புரிவாரேயானல் உண்மையன்போடுவழிபடுவார்க்கு இறைவன் எத்தகைய அருள்நலங்களைப் புரிவான்என்பதை நாம் உணரலாம்.

இவ்வாறு சிவலிங்கஉருவில் இறைவன்வெளிப்பட்டருளிய காலம் மாசிமாதத்தில் அமரபட்சத்தில் திரயோதசியும் சதுர்த்தசியும் கூடிய காலமாதலின் ஆண்டுதோறும் அந்நாளை மகாசிவராத்திரி எனக்கூறுகிறேம். திரயோதசி அம்பிகை வடிவம். சதுர்த்தசி சிவவடிவம். இரண்டும் இணையும் இந்நாள் சிவசத்திரியின் சேர்க்கையைக் குறிக்கும். இச்சிவராத்திரியை நித்ய சிவராத்திரி, பட்சசிவராத்திரி, மாதசிவராத்திரி, யோகசிவராத்திரி, மாசி சிவராத்திரி என ஐந்து வகையாகக் கொண்டாடுவதும் உண்டு. ஊழிக்காலத்து நள்ளிரவில் இறைவனை உமையம்மை வழிபட்டு மீண்டும் உலகைப்படைத்து உயிர்கட்குத் தனுகரணபுவன போகங்களைத்தந்து ஆட்கொண்டருளவேண்டுவதை இவ் வழிபாடு அறிவிக்கும். உமையம்மை, விநாயகர், முருகன், வீரபத்திரர், திருமால், பிரமன், நந்தி, பிருங்கி, மகாகாளர் ஆகியோர் இச்சிவராத்திரி வழிபாட்டைப் புரிந்து பல்வகை நலங்களையும் பெற்றவர்கள்.

**சமயதீட்சை சிவபூசை :**

சமயதீட்சை சிவபூசை எடுத்துக்கொள்வோர் சிவராத்திரி நாளில் குருமுகமாக அத்தீட்சைகளை எடுத்துக்கொள்வது விசேஷ பலனைத்தரும் எனக் கூறப்படுகின்றது. சிவராத்திரி, விநாயக சதுர்த்தி முதலிய விசேட தினங்களில் சிவவழிபாட்டில் ஈடுபாடுடையசெல்வர்கள்வழிபாட்டுக்குரியபூசாத்திரவியங்கள் பரிவட்டம் சந்தனம்தேங்காய்பழம்பூசைக்குரியஉபகரணங்கள் பூசகர்களுக்குக் கொடுத்துதவுவது சிறந்த சிவபுண்ணியப் பயனைத்தரும்.

# யாரறிவார் பரம்பொருளை ?

புலவர் திரு. இரா. செல்வக்கணபதி எம். ஏ.

விண்பழித்து மண்புகுந்த இறைவன் ஓர்நாள்
வீதிவழி நடந்திட்டான்; தன்னைக் காணக்
கண்விழித்து இரவெல்லாம் பூசிப் பார்க்குக்
காட்சிதர உளங்கொண்டு இறங்கி வந்தான்!
அண்ணாந்து பார்த்திட்டு வியந்தான்; ஆங்கே
அழகியஓர் மாளிகையின் வாயில் சேர்ந்தான்
"எண்ணரிய பரம்பொருளே! என்றன் இல்லம்
ஏகாயோ?" பணக்காரன் பூசை கேட்டான்!

குழிவிழுந்த கண்ணோடும் ஏழ்மைக் கோலக்
குறிப்புகளும் கொண்டானாய் எதிரில் சேர்ந்தான்
விழிபிதுங்கி அருவருத்து யார்நீ என்றே
வெறுப்போடு பணக்காரன் இடைமறித்தான்
அழியாத பரம்பொருள்நான் அழைத்தாய் என்றே
ஆர்வமுடன் வந்திட்டேன் இறைவன் சொன்னார்
இழிபிறவி! சீபோபோ! கதவைச் சாத்தி
இடுப்பொடிப்பேன் என்றானா பயந்து போனான்!

கற்றஒரு ஞானியது அழைப்பைக் கேட்டுக்
கடவுளுக்குப் பேராசைக் கதவிடித்தான்
முற்றறிவுப் பொருள்நீயா? வேதம் சொன்ன
முகப்பொலிவோ குறிப்புகளோ ஏதும் இல்லை
சற்றுஇரு! யோசித்தான்! கல்வி ஞானம்
சாற்றுவதை ஒப்பிட்டான்! வெகுண்டு நோக்கி
புற்றரவாய்ச் சீறிட்டான்; உலகை ஏய்க்கப்
புறப்பட்டார் எத்தனைபேர் உன்போல் என்றான்!

மண்ணுலகை நினைத்திட்டு வெதும்பிப் போன
மாதேவன் வீதிவழிக் களைத்துப் போனான்!
விண்ணுலகம் போல்தானா? மண்ணுங் கூட?
வெறுப்போடு நடந்தான்ஓர் குடிசை கண்டான்!

கண்ணோடு கருத்தாகச் செருப்புத் தைப்பான்
கைவிளக்கின் ஒளிகண்டு வாயில் சேர்ந்தான்
அண்ணாந்து பார்த்தஅவன் இவனைக் கண்டே
அங்கேஏன் நிற்கின்றாய் வாடா என்றான்!

நான்என்றேன்; வாயெடுக்கும் முன்னே அன்னோன்
நலிவிக்கும் பனிஉள்ளே அமர்க என்றான்
"ஏன் அங்கே! என்செய்தாய் இங்கே வந்து
இவனுக்கோர் சிறுகோப்பைப் பருகத் தாராய்"
தான்கொண்டான் சொற்கேட்டு மனைவி தந்தாள்
தடுமாறிப் போனவனும் குடித்துத் தீர்த்தான்
நான்யாரென் றறியாதே என்னைக் கூட்டி
நன்றிசெய்தாய்! அறிவாயோ! என்னை என்றான்!

பெரிதாகச் சிரித்துவிட்டுச் செருப்புத் தைப்பான்
பேரென்ன சொல்லேனென் றலுத்துக் கேட்டான்!
விரிசடையான் அப்பாநான் கடவுள் என்றே
வியப்பானென் றெண்ணியனாய் விரித்துச் சொன்னான்!
சரிபோடா! நீசொல்லும் முன்பே உன்னைச்
சரியாக நானறிவேன் என்று கூறி
சிறிதேனும் வியப்பின்றிப் பணியில் நின்றான்!
சிவனுக்கோ பேரதிர்ச்சி! விளக்கம் கேட்டான்!

"என்னுடைய குடிசையினை நாடி இந்த
இருட்டினிலே நீவந்த போதே உன்னை
வன்னமுற இறைவனென அறிந்து கொண்டேன்!
வசதியுடை மனிதர்எனை நாடி வந்து
இன்னமும்நான் அறியேனே! " என்று சொல்லி
எழுந்திருப்பாய்! வேலைபல இருக்கு தென்றான்!
அன்னமொழி கேட்டிறைவன் வியந்து நின்றான்!
அயர்ந்திருந்த நான்திடுக்கிட் டெழுந்து கொண்டேன்!



# தாயுமான சுவாமிகள்

'சித்தாந்தப் புலவர்மணி'

திரு. ந. ரா. முருகவேள், M. A., M. O. L.

**முன்னுரை :**

தாயுமான சுவாமிகள், நம் தமிழ்நாட்டில் தோன்றியருளிய தவஞானச் சான்றோர்கள் பலருள், தலைசிறந்த ஒருவர். அப் பெருந்தகையினை நினைக்குங்காலெல்லாம், அவர்தம் தூய துறவு நெறிப்போக்கு – தத்துவ வித்தகம் – யோகானுபவ நலம் – சமய சமரச ஞானம் – அருள் உள்ளம் – தாழ்வெனும் தன்மை – பக்தி மனப்பான்மை – பலகலை நூற்பயிற்சி – உலகியலறிவு – அரிய இனிய கவிதைத் திறம் ஆகிய, பற்பல நற்பண்பு நலங்கள், நம்மனோர் மனக்கண்களின் முன்னே தோன்றிக் களிநடம் புரிகின்றன.

"புவிராசர் கவிராசர் தவராசர் என்றுனைப்
போற்றிசய போற்றிஎன்பார்"

என்று, தாயுமானவர் தம்முடைய ஞானகுருவாகிய மௌன குருவினைப் புகழ்ந்துபாடிப் போற்றுவதனைத்தழுவி, நாமும் நம் முடைய குருவாகிய தாயுமானவப்பெருந்தகையைக் கவிராசர் என்றும், தவராசர் என்றும், புகழ்ந்து போற்றி மகிழலாம்.

**அறிஞர்களின் புகழுரைகள் :**

நம்தமிழ்நாட்டில் வாழையடி வாழையாகச் சான்றோர்கள் பலர் தோன்றியிருந்தாலும், அவர்களுள்ளே இந்தக் கால நிலையில் மிகவும் சிறந்தெடுத்துப் போற்றத் தக்கவராக விளங்கு பவர் தாயுமானவரே என்றும், அவர்தம் பாடல்கள் பின்னைப் புதுமைப் பெற்றிமையுடையனவாயினும், முன்னைப் பெரியோர் களின் முன்னைப் பழம் பொருள்களையே நன்கினிது எடுத்து முழங்குகின்றன என்றும், பேரறிஞர் ஒருவர் குறிப்பிடுகின்றார். 1

---

1 "Saint Thayumanavar, whose lyrics have led me on to think philosophically while still a young boy, is one such in a long line of mystics but one best suited to the modern age though speaking an idiom 'more ancient than the ancient's". — Sir Kandiah Vaidynathan.

சமயம் தத்துவம் கவிதை ஆகிய துறைகளில், வடமொழி இலக்கியங்களைவிடக்கூட ஒருவகையில் தமிழ் மிகவும் சிறந்து விளங்குகின்றது என்றும், அதற்குக் காரணம் தாயுமானவர் திருவள்ளுவர் நக்கீரர்மாணிக்கவாசகர்போன்றசான்றோர்களின் பாடல்களேயாம் என்றும், வேதாந்தம் சித்தாந்தம் என்னும்இரு திறக் கொள்கைகளிலும் உள்ளனபோலத் தோன்றும் முரண்பாடுகளைப் போக்கி வேதாந்த சித்தாந்த சமரச நிலையினை விளக்கியருளியவர் தாயுமானவர் என்றும், மற்றொரு சிறந்த பேரறிஞர் கூறுகின்றார். 2

இவ்வாறே தமிழ் நாட்டிற்குப் போந்து வாழ்ந்திருந்து, தம் சமயப் பணியாற்றி வந்த ஒருவர், 'தாம் கிறித்துவ சமய உணர்வும் உறுதியும் உடையவராக இருந்தும், தாயுமானவரின் பாடல்கள் பலவற்றிலும் ஒளிவிட்டுத் திகழும் நுண்ணிய ஆன்மஞான அனுபவ உண்மைகளை வியந்து பாராட்டாது தம்மால் இருக்க இயலவில்லை' என்றும். 'அப்பாடல்களிற் பொதிந்துள்ள அரும்பெறல் உண்மைக் கருத்துக்கள் ஒருபுறம் இருப்ப, அப்பாடல்களில் அமைந்துள்ள நய ஒளியின் நடனமே, தம்முடைய ஆங்கிலேயச் செவிகளையும் கவர்ந்துவிடவல்லதாக விளங்குகின்றது' என்றும் போற்றிப்புகழ்கின்றார். 3

---

2 "Even Sanskrit literature with all its multiform development and its technical perfection, is not superior in the matter of philosophical and religious speculation or poetry, to the highest example of the art of Tamil, - especially as exemplified in Thayumanavar in such miraculous verses as the Ode to Sakthi and in the works of Thiruvalluvar, Nakkirar and Manickavasagar. The Saiva Siddhanta held sway in the extreme south of India and the tenets of the Vedantha seemed on certain points to conflict with it but the task of sages like Thayumanavar was to reconcile and harmonize the conflicting positions" — Dr. C. P. Ramaswamy Aiyar.

3 "It is impossible even for one accustomed to the light and certainty of Christianity not to admire the keen spiritual insight which many passages of the Thayumanavar's writings display. Apart altogether from the thought which they contain, the rhythmic dance of the original strikes even an English ear".
— G. Mackenzie Cobban.

**வரலாற்றுக் குறிப்புக்கள் :**

தாயுமானசுவாமிகள் வாழ்ந்திருந்த காலம் 18ம் நூற்றுண்டு அவர்தம் தந்தையார் ஆகிய கேடிலியப்பப் பிள்ளை என்பர். திருச்சிராப்பள்ளியில் இருந்து அரசு செலுத்திவந்த விசயரங்க சொக்கநாதநாயகர் (கி. பி. 1706–1732) என்பவரின், அரண்மனை மேற்பார்வையாளர் பதவியிற் பணியாற்றி வந்தார். தம் தந்தையாருக்குப் பின்னர், அரசரின் வேண்டுகோட்கு இணங்கித் தாயுமானவர் விசயரங்க சொக்கநாத நாயகர் காலத்தும், அவர் தம் மனைவியார் ஆகிய அரசி மீனுட்சியம்மையார் காலத்தும் ( கி. பி. 1732 – 1736 ). அப்பதவியில் அமர்ந்து சிலகாலம் பணியாற்றினுர்.

அக்காலத்தில் அரசியற் சிக்கல்களும் சூழ்ச்சிகளும் நிறைந்திருந்தன. பாளையக்காரர்களுக்குள்ளே போரும் பூசலும் பிணக்கும் மிகுந்து வந்தன. ஆற்காட்டு நவாபும், ஐதராபாத் நிசாமும், பாளையக்காரர்களைப் பல வகைகளில் ஆட்டிவைத்து, நாயக்க அரசை நலிவுறுத்திக் கைப்பற்றிக்கொள்ள முயற்சிகள் புரிந்து வந்தனர்.

> நாடும்நக ரும், நிசான் ஆட்டிய பாளயமும்,
> ஈடுசெயு மோ? முடிவில் எந்தாய் பராபரமே.

என்று இச்சூழ்நிலைகளை, ஒருவகையில் தாயுமான சுவாமிகள் குறிப்பிடுதல் காணலாம்.

விசயரங்க சொக்கநாத நாயகர், தஞ்சை மகாராட்டிரரின் திடீர்ப்படையெடுப்பால் திகைத்து மனமுடைந்து மாண்டார். அரசிமீனுட்சியம்மையாரின் அரசாட்சியை அடைதற்குத்தானே உரிமையுடையவன் எனப் பங்காரு திருமலை என்பவன், பல குழப்பங்களும் சதிகளும் செய்தான். சந்தாசாகிப் சூழ்ச்சியினுல், அரசி மீனுட்சியம்மை தற்கொலை செய்துகொள்ள நேர்ந்தது. அம்மையார் வளர்ந்து வந்த விசயகுமார் என்னும் இளவரசர், அன்வாருதீன் என்பவரால் கொல்லப்பட்டார். இவைகளெல்லாம் தாயுமானவரின் இயற்கைத் துறவுள்ளத்தை மேலும் துறவு நெறியில் உறுதிப்படுத்துவன ஆயின.

**சான்ருேர்ப் போற்றிய தகவு :**

தாயுமானவர் உலகில் வாழ்ந்தார்; ஆனுல் அவருள்ளத்தில் உலகம் பதியவில்லை. " He was in the worlt, but not of the worlt " 1. அவருடைய உள்ளம் இயல்பாகவே இறைபருட்

பேற்று முயற்சியிலேயே ஈடுபட்டு நின்றது. தமக்கு முன்னே வாழ்ந்திருந்த சான்றோர்களையும், அவர்தம் நூல்களையும் தாயுமானவர் தகவுறப் போற்றி ஒழுகினர். அப்பர், சம்பந்தர் சுந்தரர் மாணிக்கவாசகர் என்னும் சமய குரவர்களையும், மெய்கண்டார் அருள் நந்தி மறைஞானசம்பந்தர் உமாபதிசிவம் ஆகியசந்தான குரவர்களையும், தாயுமானவர் சாலவும் வழிபட்டுத் துதித்து மகிழ்ந்தார். திருமூலர், பட்டினத்தார், அருணகிரியார், சிவவாக்கியர், சுகர், வாமதேவர் முதலிய சான்றோர்களையெல்லாமும், அவர் பாராட்டிப் பரவியுள்ளார்.

> " தேவர்தொழும் வாதவூர்த் தேவே. என்பேன்
> திருமூலத் தேவே! இச் சகத்தோர் முத்திக்கு
> ஆவலுறச் சிவஎன்வாக் குடனே வந்த
> அரசே!சும் மாஇருந்துன் அருளைச் சாரப்
> பூவுலகில் வளர்அருண கிரியே! மற்றைப்
> புண்ணியர்காள்! ஓ என்பேன்! "

எனச் சுவாமிகள், தமக்கு முன்னே வாழ்ந்திருந்த சான்றோர்கள் பலரையும் குறிப்பிட்டுப் போற்றுதல் காணலாம். பட்டினத்தடிகள்மாட்டும், அருணகிரிநாதர் இடத்தும் சுவாமிகள் பெரு மதிப்புக்கொண்டவராக விளங்குகின்றார். " பாரனைத்தும் பொய் எனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல் ஆரும் துறக்கை அரிதரிது " என விதந்து மொழிகின்றார் தாயுமானவர்! " ஐயா அருணகிரி அப்பா! உனைப்போல் மெய்யாக ஓர் சொல் விளம்பினர் யார்? " என வியந்து வினவுகின்றார் அவர்! அருணகிரிநாதர் அருளிய கந்தரநுபூதி என்னும் நூலினைச் சிறந்தெடுத்துப் போற்றிக் " கந்தரனுபூதிபெற்றுக் கந்தரனுபூதிசொன்ன எந்தையருள் நாடி இருக்கும் நாள் எந்நாளோ? " என்று சுவாமிகள் ஏக்கறுகின்றார்.

## மௌன குரு :

திருமூலரைச் "சக்கரவர்த்தி தவராச யோகி" எனப்புகழ்ந்து போற்றும் தாயுமானவர். திருமூலர் மரபில் வந்த மௌனகுரு என்பவர், தமக்குச் சிறந்த அருட்குருவாக வாய்க்கப்பெற்றார். அவரை "மந்தரகுருவே யோகதந்தர குருவே! மூலன் மரபில் வரும் மௌனகுருவே! " எனக் குறிப்பிட்டுத் தாயுமானவர் துதிக்கின்றார். " ஞான கருணகர முகம் கண்டபோதினிலே நவநாத சித்தர்களும் உன் நட்பினை விரும்புவார்; சுகர் வாமதேவர் முதல் ஞானிகளும் உனை மெச்சுவார்" எனத் தம்குருவை வியந்து புகழ்ந்தோதுகின்றார். திருமூலர் மரபில் வந்த மௌன குரு, இவர்க்கு 'வேதாகமத் துணிபு இரண்டில்லை ஒன்றே '

என்று, "சிவஞானசித்தி நெறியை விளக்கி உபதேசித் தருளினர். அதனல் "தரணிமிசை லோகாயதன் சமயநடை சாராமல், வேதாந்த சித்தாந்தசமரச சிவானுபூதிநிலை" இவருக்கு இனிது வாய்ப்பதாயிற்று.

**சமய சமரச ஞானம் :**

"இறையுணர்வு ஒளியானது முழுவதாக நமக்கு வெளிப் படுமாயின், நம் கண்கள் அதனைத் தாங்கமாட்டாது ஒளி மழுங்கிக் குருடாகிவிடும். அதனல் நம் கண்கள் அதனைக் கண்டுணரக் கூடும் வண்ணம், அது பலநிற ஒளிகளாகச் சிதறி வெளிப்படுகின்றது. பல்வேறு சமய ஒழுகலாறுகளும், ஒப்பற்ற ஒரு பரம்பொருளையே வெவ்வேறு வடிவங்களிற் கண்டு அணி செய்கின்றன. அப் பல்வேறு சமயக் காட்சிகளும் ஒன்றனை யொன்று தழுவிச் செழிப்புற்று, மனித இனத்துக்குப் பலதிறப் பட்ட முழுநிறைவுத் தன்மையையளித்துப் பயன்படுகின்றன.

இந்து மதத்தின் ஆன்மஞானஒளி, யூதமதத்தின்கீழ்ப்படிதற் பண்பு, கிரேக்க மதத்தின் அழகியலுணர்வு, ஜைனமதத்தின் பரந்த நோக்கம், பௌத்த மதத்தின் சிறந்த கருணைத்திறம் கிறித்தவ மதத்தின் தெய்விக அன்புக்காட்சி, இசுலாம்மதத்தின் இறையருட்டலைப்பாடு ஆகிய எல்லாம் ஆன்மீக வாழ்வின் பல் வேறு கூறுகளையே புலப்படுத்துகின்றன. இவையனைத்தும் மனிதவுணர்வு எய்தித் திளைத்த சிறந்த இறையருளனுபவத்தின் வெளிப்பாடுகளேயாகும் ". 4

இன்னோரனைய சிறந்த உண்மைகளையெல்லாம் மௌன குருவின் அருளுபதேசத்தால், தாயுமானசுவாமிகள் செவ்விதின் உணர்ந்து தெளிந்தார்; சமய சமரச ஞானம் அவர்க்கு நன் கினிது கைவந்தது. பல்வேறு இடங்களினின்றும் தோன்றும்

---

4 " The spiritual radiance of *Hinduism*, the faithfull obedience of *Judaism*, the beauty of Greek *Paganism*: the broad Catholic outlook of *Jainism*, the noble compassion of *Buddism*, the vision of divine love in *Christianity*, and the spirit of resignation to the Sovereign Lord of *Islam*, all these represent different aspects of the inward life, projections on the spiritual plane of the ineffable experience of the human spirit"

—Dr. S. Radhakrishnan.

நதிகளெல்லாம் முடிவிற் கடலேயே சென்று அடைதல் போல, எல்லாச்சமயங்ளும் அனுபவநிலையில் இறைவனிடமே நம்மைக் கொண்டுசென்று சேர்க்கின்றன. ஆதலின் சமயங்களுள் ஒன்றுக்கொன்று மாறுபாடு எதுவும் இல்லை.

> " வேறுபடும் சமயமெலாம் புகுந்து பார்க்கின்,
> விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லால்,
> மாறுபடும் கருத்தில்லை; முடிவில் மோன
> வாரிதியில் நதித்திரள்போல் வயங்கிற் றம்மா "

எனத் தாயுமானவர் பாடியருளியிருப்பது, அவர்தம் சமய சமரச ஞானத்தைத் தகவுற நமக்கு உணர்த்துவதாகும்.

## நெஞ்சையள்ளும் செஞ்சொற் பாடல்கள் :

தாயுமானவரின் பாடல்களுள் ஒவ்வொன்றும், நெஞ்சையள்ளும் நீர்மையுடையன. மக்கட் பிறப்பின் விருப்பத்தை விளக்கும் முறையில் வரும் "எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் யாதினும் அரிதரிது காண்! இப்பிறவி தப்பினுல் எப்பிறவி வாய்க்குமோ? ஏது வருமோ அறிகிலேன் " எனவரும் பாடல், அனைவருமே அறிந்ததொன்று!

பெரும்பாலான மக்களிடம் பொதுவாக மிகுந்து காணப்படும் ' ஆரா இயற்கை அவா ' ஆகிய பேராசையின் பெற்றியினை, " ஆசைக்கோர் அளவில்லை; அகிலமெல்லாம் கட்டி ஆளினும் கடல்மீதிலே ஆணைசெலவே நினைவர், அளகேசன் நிகராக அம்பொன் மிக வைத்த பேரும், நேசித்து ரசவாத வித்தைக்கு அலைந்திடுவர், நெடுநாள் இருந்தபேரும் நிலையாகவே இனும்காய கற்பம் தேடி நெஞ்சு புண்ணுவர், எல்லாம் யோசிக்கும் வேளையிற் பசித்து உண்பதும் உறங்குவதுமாக முடியும் " என எடுத்து விளக்கும் பாடலும் எல்லாரும் அறிந்த சிறந்த பாடல்.

யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என அறைகூவி அழைக்கும் முறையில் " காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர்! அகண்டாகார சிவபோகம் எனும் பேரின்ப வெள்ளம்பொங்கி ததும்பிப் பூரணமாய் ஏக உருவாய்க் கிடக்குதையோ! இன் புற்றிட நாம் இனி எடுத்த தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேர வாரும் செகத்தீரே! " எனவரும்பாடல், எவர்நெஞ்சையும் கவர வல்லது! "சைவசமயமே சமயம்", " இராசாங்கத்தில் அமர்ந்தது வைதிகசைவம் அழகிது அந்தோ! என்பன போன்றுவரும் பாடற் பகுதிகள், உள்ளுவோர் உள்ளமெல்லாம் கொள்ளை கொள்ளவல்லன. பராபரக்கண்ணி, எந்நாட்கண்ணி போல்வன பல்காற் பயின்று சுவைத்து மகிழும் பான்மையன.

# செல்வமுத்துக்குமார சுவாமி
# நாமாவளி இசைப்பாடல்

திருமுறைக்கலாநிதி,

**வேளூர், திரு. க. சொக்கலிங்க ஓதுவார்.**

இராகம் - ஹிந்தோளம் ] [ தாளம் - ஆதி. திஸ்ரநடை

1 ஆறுமுகத் தெய்வம்நம்மை ஆண்டருளும் தெய்வம்
ஆறுபடை வீட்டினிலும் அமர்ந்திருக்கும் தெய்வம்
ஏறுமயில் ஏறிவிளை யாடுகின்ற தெய்வம்
என்றும் இன்பம் அருளுகின்ற எங்கள்குலதெய்வம் (ஆ)

2 கலியுகத்தில் கண்கண்ட தெய்வம் எங்கள்தெய்வம்
கைகுவித்துப் பணிபவரைக் காத்தருளும் தெய்வம்
வலியவந்து ஆண்டுகொண்டு வாழ்வளிக்கும் தெய்வம்
வளங்கொழிக்கும் வேளூரில் வாழுகின்ற தெய்வம் (ஆ)

3 சித்தத்தில் நினைப்பவர்க்குத் தித்திக்கும் தெய்வம்
செல்வ முத்துக் குமரன்எனும் தெய்வம் எங்கள்தெய்வம்
நித்தம்நினை வார் வினையை நீக்குகின்றதெய்வம்
நேசம் வைத்தவர் நெஞ்சில் வாசம்செய்யும்தெய்வம்(ஆ)

4 வள்ளிதந்த தினைமாவை அள்ளியுண்ட தெய்வம்
வையகத்தில் மெய்கண்ட தெய்வம் எங்கள்தெய்வம்
தெள்ளுதமிழ் மொழியைக் குறுமுனிக் கருளும்தெய்வம்
திருப்பரங் குன்றத்துறையும் தெய்வம் எங்கள்தெய்வம்
(ஆ)

5 தஞ்சம்என் றடைந்தவரைத் தாங்கிக்கொள்ளும்தெய்வம்
தையலம்மை மடியில் விளையாடுகின்ற தெய்வம்
வஞ்சமிலா நெஞ்சினுள் வசிக்கும்எங்கள் தெய்வம்
வடிவேலால் வினைப்பகையைப் பொடியாக்கும் தெய்வம்
(ஆ)

6 எண்ணுமவர் எண்ணமெலாம் முடித்தருளும் தெய்வம்
ஈராறு கையாலும் எடுத்தணைக்கும் தெய்வம்
மண்ணவர்க்கும்விண்ணவர்க்கும்வாழ்வளிக்கும்தெய்வம்
மருந்தாகிப் பிணிதீர்த்து மகிழ்வளிக்கும் தெய்வம் (ஆ)

7 கள்ளமிலா உள்ளமதைக் கொள்ளைகொளும் தெய்வம்
கண்ணுரக் காண்பவர்க்கே காட்சிதரும் தெய்வம்
துள்ளிநமன் வரும்போதே தோன்றும்எங்கள் தெய்வம்
தொழும்அடியார் துன்பமதைத் துடைக்கும் எங்கள்
[தெய்வம் (ஆ)

8 கயிலைமலை நாதனுக்கே குமரன்எங்கள் தெய்வம்
கருணைபொழி பன்னிரண்டு கண்ணுடைய தெய்வம்
உயிர்க்குயிராய் உறுதுணையாய் வருகின்ற தெய்வம்
உரைத்திடவும் வேறுண்டோ உலகில்ஒரு தெய்வம் (ஆ)



---

EXTRACT FROM THE VISITORS' BOOK

**Dharmapuram Adhinam**

**Sri Amirthakadeswaraswami Devasthanam, Tirukkadaiyur.**

I had the good fortwne to affer worship at this famous temple today. The temple is kept very clean: the alankaram the deities is very impressive

11—2—83. (S-d) **S. Natarajan,**
Judge, High Court of Madras.

# சைவத் திருமுறைகள்

திரு. கி. பாலசுப்பிரமணியம்

*[ ஓர் உரையாடல் ]*

இளைஞர் : ஐயா பெரியவரே! வணக்கம்! திருமயிலை அருள்மிகு கபாலீசுவரர் ஆலயக் குடமுழுக்கு விழாவில் தங்களைச் சந்திப்பதில் மகிழ்ச்சியடைகிறேன்.

பெரியவர் : திருஞானசம்பந்தர் அருளிய தேவாரத் திருப்திகத்தால் எலும்புப் பெண்ணாகிய இத்திருத்தல குடமுழுக்கு விழாவில் நீயும் கலந்துகொள்வது நீ முன்செய்த புண்ணியத்தால் ஆகும்.

இளைஞர் : தேவாரத் திருமுறைகள் என்பதின் பொருள் என்ன என்பதை எனக்கு விளக்குவீர்களா?

பெரியவர் : தெய்வத்தைப் பாமாலையினால் துதிப்பது தேவாரம் ஆகும். ஆரம் என்பது மாலை எனப்படும். இறைவனை (சிவபெருமானை)துதிக்கும் தெய்வீகப்பாடல்களை முறையாகப்பாடுதற்கு நம்முன்னோர்கள் வழிசெய்துள்ளனர். அவை மொத்தம் பன்னிரெண்டு திருமுறைகளாகும்.

இளைஞர் : திருமுறைகளை இயற்றியவர் யார்?

பெரியவர் : முதல் மூன்று திருமுறைகள் திருஞானசம்பந்தர் அருளிச் செய்த தேவாரம் ஆகும். திருநாவுக்கரசர் பாடியதேவாரங்கள் நான்கு, ஐந்து, ஆறுவதுதிருமுறைகள் ஆகும். சுந்தரமூர்த்தி நாயனார் அருளிய தேவாரம் ஏழாவது திருமுறை ஆகும். மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம் திருக்கோவையார் எட்டாவது திருமுறை ஆகும்,

இளைஞர் : திருவிசைப்பா, திருப்பல்லாண்டு பாடியவர் யார்? அவை திருமுறைகளில் உள்ளதா?

பெரியவர் : சேந்தனார், திருமாளிகைத்தேவர், கருவூர்த்தேவர், பூந்துருத்திநம்பிகாடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தமநம்பி, சேது

ராயர் ஆகியஒன்பது அடியார்கள்பாடிய திருவிசைப்பா பாடல்கள் ஒன்பதாந்திருமுறை ஆகும். சேந்தனர் எழுதிய திருப்பல்லாண்டு இவ்வொன்பதாவது திரு முறையில் அடங்கும். திருமூலர் திருவாய்மலர்ந்தருளிய திருமந்திரம் பத்தாம்திருமுறையாகும்.

இளைஞர் : பதினொன்றும் திருமுறையினைப்பற்றிக் கூறுமாறு பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

பெரியவர் : திருவாலவாயுடையார் என்னும் மதுரைஇறை யெம்பெருமான் எழுதிய திருமுகப்பாசுரமும், மற்றும் பல அடியார்கள் பாடிய நூல்களும் பதினேராவது திருமுறையாகும். அவைகள் பின்வருமாறு :–

## ஆசிரியரும் எழுதிய நூல்களும்

அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவராகிய காரைக்கால் அம்மையார் :— திருவாலங்காட்டு மூத்தத் திருப்பதிகங்கள், திருவிரட்டைமணிமாலே, அற்புதத்திருவந்தாதி.

ஐயடிகள்காடவர்கோன் :— க்ஷேத்திரத்திருவெண்பா.

சேரமான்பெருமாள்நாயனர் :— பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, திருக்கயிலாயஞானஉலா.

இளைஞர் : திருமுருகாற்றுப்படை பதினேராந் திருமுறையைச் சேர்ந்ததா ?

பெரியவர் : ஆம் ! நக்கீரர் இயற்றிய திருமுருகாற்றுப்படை திருமுறை நூலாகும். தொடர்ந்து அவர் எழுதிய நூல் களும் மற்றும் அடியார்கள் எழுதிய நூல்களையும் கூறு கின்றேன்,

நக்கீரதேவ நாயனர் :— கயிலைபாதிகாளத்திபாதியந்தாதி: திருஈங்கோய்மலே எழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திருவெழுகூற்றிருக்கை, பெருந்தேவபாரணி, கோபப்பிரசாதம் காரெட்டு, போற்றித்திருக்கலிவெண்பா, திருமுருகாற்றுப்படை, திருக்கண்ணப்பதேவர் திருமறம்,

கல்லாடதேவ நாயனர்:— திருக்கண்ணப்பதேவர்திருமறம்.

கபிலதேவ நாயனார் :— மூத்த நாயனார், திருவிரட்டைமணி மாலை, சிவபெருமான் திருவிரட்டைமணிமாலை, சிவபெருமான் திருவந்தாதி.

பரணதேவ நாயனார் :— சிவபெருமான் திருவந்தாதி.

இளம்பெருமான் அடிகள் :— சிவபெருமான் திருமும்மணிக் கோவை.

அதிராவடிகள்:— மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை.

பட்டினத்தார் :— கோயின் நான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்பம் உடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது.

நம்பியாண்டார் நம்பி :— திருநாரையூர் விநாயகர் திரு விரட்டை மணிமாலை, கோயில் திருப்பண்ணியர் விருத்தம், திருத்தொண்டர் திருவந்தாதி, ஆளுடையபிள்ளையார் திருவந் தாதி, ஆளுடையபிள்ளையார் திருச்சண்பைவிருத்தம், ஆளுடைய பிள்ளையார் மும்மணிக்கோவை, ஆளுடையபிள்ளையார் திருவுலா மாலை, ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம், ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை, திருநாவுக்கரசுதேவர் திருஏகாதச மாலை.

இளைஞர் : பதினொரு அடியார்களின் திருப்பாடல்களும் திரு முகப் பாசுரமும் பதினொராவது திருமுறை என அறிந் தேன். பன்னிரண்டாவது திருமுறையை எழுதியவர் யார் ?

பெரியவர் : சேக்கிழார் எழுதிய திருத்தொண்டர் புராணம் பன்னிரண்டாவது திருமுறை ஆகும். திருமுறைகளைப் படிக்கும் முன்பும் நிறைவுபெறும்பொழுதும் “ திருச் சிற்றம்பலம் “ என்று தில்லை நடராஜப்பெருமானை துதி செய்யவேண்டும்.

இளைஞர் : நன்றி ! மீண்டும் சந்திப்போம்.

திருச்சிற்றம்பலம்

# பாரதியார் பாட்டொன்றின் ஆராய்வு

**வித்துவான் திரு. அடிகளாசிரியர்,**

*சிறப்புநிலை இணைப்பேராசிரியர், சுவடிப்புலம் –*
*ஓலைச்சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.*

**தோற்றுவாய் :**

பாரதியார் புதுவை நகரத்தில் தங்கியிருந்த பொழுது அவர் மனம் அமைதியை விரும்பும். அதற்காக அவர் நகரத்திற்கு வெளியே சென்று உலாவியும் தங்கியும் பலவகை இயற்கைக் காட்சி முதலியவற்றைக் கண்டு வருவார்.

உலகமக்கள் இக்காலத்தில் திரைப்படக் காட்சியைக் கண்டு களிப்பதற்கு ஓடுவதைப்போல இவர் அமைதிதராத புதுவை நகரத்தைவிட்டு அதற்குப் புறம்பேயுள்ள சாலை, சோலை, வயற்புறம், கடற்புறம் முதலிய இவ் இடங்கட்குச் சென்று அங்குள்ள இயற்கைக்காட்சி முதலானவற்றைக்கண்டு அமைதி பெற்று அகமகிழ்ச்சி யடைவார். அவர் அவ்விடங் களில் கண்ட காட்சியிலிருந்து தாம் பாடுகின்ற பாட்டிற்கேற்ற பாடுபொருளாகிய உரிப்பொருள்களைப் பெற்றுக்கொண்டு அப் பொருளைப் பாடலில் அழகாக அமைத்துக்கொள்வார்.

**அவர் கண்ட தீபவொளி :**

புதுவை நகரத்தை அடுத்த கிராமப் பகுதியொன்றில் தென்னைமரச் சோலைக்குள் சித்தாந்த சாமி திருக்கோயில், என்பது இருக்கின்றது. பாரதியார் அங்கு அடிக்கடி சென்று தங்குவார். அத்திருக்கோயில் வாயிலில் இரவு பகல் எந்த நேரத்திலும் எரிந்து கொண்டிருக்கும்படி நந்தா விளக்கொன்று வைக்கப்பட்டிருந்தது. பாரதியார் அத்தீபவொளியை அடிக்கடி பார்ப்பார். அத்தீபவொளி உலகமக்களுக்கு நல்ல கருத்துக் களை உணர்த்துவதாகக் கருதினர். அக்கருத்தினைச்,

'சித்தாந்தசாமி திருக்கோயில் வாயில் தீபவொளி'

என்ற தலைப்பில் பாட்டாக எழுதினர். மேற்கண்ட தலைப்பில் இருக்கவேண்டியபாட்டு இப்பொழுது 'சித்தாந்த சாமி கோயில்' என்ற தலைப்பில் உள்ளது.

**இப்பொழுதுள்ள பாடம் :**

பாரதியார் பாடல்களைத் திரட்டிப் பெரிதும் சிறிதுமாகப் பலவடிவத்தில் பல பதிப்புக்கள் இதுவரை வெளியாகியுள்ளன. அப்பதிப்புக்களெல்லாம் திருத்தமான ஆராய்ச்சிப் பதிப்பாக இல்லை என்பது என் கருத்தாகும். அங்கங்கேகளைய வேண்டிய பல பிழைகள் உள்ளன. அவையெல்லாம் திருந்த வேண்டும். எடுத்துக்காட்டாக 'சித்தாந்த சாமி திருக்கோயில்' என்ற தலைப்பில் உள்ள பாடலைப் பார்ப்போம். அப்பாட்டினைப் படித்துப் பார்த்தால்,

"சித்தாந்தசாமி திருக்கோயில் வாயில் தீபவொளி"

என்ற தலைப்பில் அப்பாடலின் தலைப்பு இருக்கவேண்டும். அப்பாடலின் இப்பொழுதுள்ள வடிவம்

1. சித்தாந்தச் சாமி திருக்கோயில் வாயிலில்
 தீப வொளியுண்டாம் - பெண்ணே
 முத்தாந்த வீதி முழுவதையும் காட்டிட
 மூண்ட திருச்சுடராம் - பெண்ணே

2. உள்ளத் தழுக்கும் உடலிற் குறைகளும்
 ஒட்ட வருஞ்சுடராம் - பெண்ணே
 கள்ளத் தனங்கள் அனைத்தும் வெளிப்படக்
 காட்ட வருஞ்சுடராம் - பெண்ணே

3. தோன்று முயிர்கள் அனைத்தும்நன் றென்பது
 தோற்ற முறுஞ்சுடராம் - பெண்ணே
 மூன்று வகைப்படுங் காலம்நன் றென்பதை
 முன்ன ரிடுஞ்சுடராம் - பெண்ணே

4. பட்டினந் தன்னிலும் பார்க்கநன் றென்பதைப்
 பார்க்க வொளிர்சுடராம் - பெண்ணே
 கட்டு மனையிலுங் கோயில்நன் றென்பதைக்
 காண வொளிர்சுடராம் - பெண்ணே

என்பதாகும். இப்பாடலில் கீழ்க்கோடிட்ட இடங்களெல்லாம் திருந்தவேண்டிய இடங்களாகும். மேலும் பாட்டின் அமைப்மையே மாற்றி அமைக்க வேண்டும்.

**அறிஞர் நன்கு கருதுக :**

(அ) முன்னர் இப்பாட்டின் தலைப்பு,

"சித்தாந்த சாமி திருக்கோயில் வாயில் தீபவொளி"

என்றிருக்க வேண்டும்.

(ஆ) பாரதியார் அத்தீபவொளி நமக்குப் பல உண்மைகளைக் காட்டுகின்றது என்று தொடங்கி, அவ்வொளி காட்டுவன வற்றைக் குறித்துப் பாடுகிறார்.

(இ) 'சொல் முடிவு' என்பது எல்லா அறிஞர்க்கும் உரிய பொதுஇலக்கணமாகும். அம்முடிவில் மாறுபட்டு அறிஞர் பாட்டிசைப்பதில்லை.

(ஈ) சித்தாந்த சாமி திருக்கோயில் வாயிலில் தீபவொளி யுண்டாம்; அது முத்தாந்த வீதி முழுவதையும் காட்டிட முண்ட திருச்சுடராம் பெண்ணே! என்று, பாரதியார் பாட்டைத் தொடங்குகிறார்.

(உ) தொடங்கியவர் 'உள்ளத்து அழுக்கினையும் உடலிற் குறைகளையும் ஓட்டவரும் சுடராம்' என்றும் 'கள்ளத் தனங்கள் அனைத்தும் வெளிப்படக்காட்டவரும் சுடராம்' என்றும் பாடுகிறார்.

(ஊ) மேற்காட்டிய தொடர்களில் ஓட்டவரும், காட்டவரும் என்பன வினையெச்சந்தொடர்ந்த பெயரெச்சமாய்ச் சுடர் என்ற பெயருடன் முடிந்து நிற்கின்றன. ஏனைய கண்ணி களும் இவ்வாறே முடிந்து நிற்கவேண்டும்.

(எ) மேற்காட்டிய முறையில் அடுத்த கண்ணி

" தோன்று முயிர்கள் அனைத்தும்நன் றென்பதைத்
தோற்ற உறுஞ்சுடராம் பெண்ணே!
மூன்று வகைப்படும் காலம்நன் றென்பதை
முன்ன இடுஞ்சுடராம் பெண்ணே ".

என்ற பாடத்தில் இருத்தல் வேண்டும். அவ்வாறிருப்பின் தோற்ற உறும், முன்ன இடும் என்று வினையெச்சந் தொடர்ந்த பெயரெச்சமாய்ச் சுடர் என்னும் பெயருடன் முடியும்.

(ஏ) அடுத்த கண்ணி "பட்டினந் தன்னிலும் பாக்கநன்று" என்ற பாடத்தில் இப்பொழுதுள்ள தொடர் "கருப்பனில் பொன்னன் நல்லன்" என்றாற்போல "பட்டினந் தன்னி லும் பாக்கம் நன்று" என்று இருத்தல் வேண்டும். பட்டினம் என்பது கடற்கரைநகரமாகும். பாக்கம்என்பது கடற்கரைக் கிராமமாகும். நகரத்தைக்காட்டிலும் கிராமம் நன்று என்பதையே பாரதியார் கருதியுள்ளார்.

(ஐ) இப்பாடலை இயற்றமிழாகக் கருதினல் பெண்ணே என்ற விளிக்கு மூண்ட திருச்சுடராம் என்பனபோன்ற சொற்களை முடிபாகக் கூட்டலாம். ஆனல் இசைத்தமிழிலே பெண்ணே என்றவிளிக்கு மூண்ட திருச்சுடராம் முதலிய சொற்களை மற்றொரு முறை திருப்பிச் சொன்னுற்ருன் இசைமுடிவு பெறும். இவ்வாறு முடிதலை இப்பாட்டினைப் போன்ற குதம்பைச் சித்தர் பாட்டாலும், இராமலிங்க சுவாமிகளுடைய

> "ஆணிப்பொன் அம்பலத் தேகண்ட காட்சிகள்
> அற்புதக் காட்சியடி அம்மா
> அற்புதக் காட்சியடி"

என்னும் பாட்டாலும் உணர்ந்துகொள்ளலாம். குதம்பைச் சித்தர் பாடலில் பல்லவியில்லை. இராமலிங்க சுவாமி பாடலில் பல்லவியும் சரணங்களும் உள்ளன.

(ஒ) மேற்கூறியவற்றை யெல்லாம் கருதினல் பாரதியார் பாட்டுக் கீழ்க்கண்ட வடிவத்தில் அமையவேண்டும்.

**'சித்தாந்தசாமிதிருக்கோயில்வாயில்தீபவொளி' (தலைப்பு)**

1. சித்தாந்த சாமி திருக்கோயில் வாயிலில்
   தீப வொளியுண்டாம் பெண்ணே!
   தீப வொளியுண்டாம்.
   முத்தாந்த வீதி முழுதையும் காட்டிட
   மூண்ட திருச்சுடராம் பெண்ணே
   மூண்ட திருச்சுடராம்

2. உள்ளத் தழுக்கும் உடலிற் குறைகளும்
   ஓட்ட வருஞ் சுடராம் பெண்ணே!
   ஓட்ட வருஞ்சுடராம்.
   கள்ளத் தனங்கள் அனைத்தும் வெளிப்படக்
   காட்ட வருஞ்சுடராம் பெண்ணே!
   காட்ட வருஞ்சுடராம்

3. தோன்று முயிர்கள் அனைத்தும்நன் றென்பதைத்
   தோற்ற உறுஞ்சுடராம் — பெண்ணே!
   தோற்ற உறுஞ்சுடராம்
   மூன்று வகைப்படும் காலம்நன் றென்பதை
   முன்ன இடுஞ்சுடராம் — பெண்ணே!
   முன்ன இடுஞ்சுடராம்

4. பட்டினந் தன்னிலும் பாக்கம்நன் றென்பதைப்
பார்க்க ஒளிர்சுடராம் — பெண்ணே!
பார்க்க ஒளிர்சுடராம்
கட்டு மனையிலும் கோயில்நன் றென்பதைக்
காண ஒளிர்சுடராம் — பெண்ணே
காண ஒளிர் சுடராம்

## இப்பாடலைப் பற்றிய சில குறிப்பு :

1. தொல்காப்பியம் புறத்திணையியலில் பாடாண்திணையில் வேலின் ஒக்கிய விளக்குநிலை என்றொரு துறை உண்டு. அத்துறை வகையைச் சார்ந்தது இப்பாடல்.

2. புறப்பொருள் வெண்பாமாலையில் பாடாண்படலத்துள் கூறப்பட்ட விளக்குநிலை என்றதுறை,

"அளப்பருங் கடற்றானையான்
விளக்குநிலை விரித்துரைத்தன்று"

என்றும்,

"அடரவிர் பைம்பூண் வேந்தன் றன்னைச்
சுடரொடு பொருவினு மத்துறை யாகும்"

என்றும் இரண்டுவிதமாக வரும் என்பர்.

3. பாரதியார் கூறும் இவ் விளக்குநிலைப் பாடல்கள் மக்களுக்குப் பல உண்மைப் பொருளை உணர்த்துகின்றன (விளக்குகின்றன).

4. உமாபதிசிவம்என்னும் ஞானசிரியர், உயிர்கள் உலகப் பொருள்களை அறிவதற்கு, இறைவன் அறிவு உபகாரப்பட அறிவித்துநிற்கும்நிலையை உணர்த்த, கண் ஒளியையும் விளக்கின் சோதியையும் உவமையாகக்கூறியுள்ளார். கண்ணொளி பொருள்களைக்காணவேண்டின் விளக்கொளி முற்பட இருந்து காட்டவேண்டும் என்பர். அஃதேபோல் உயிர் உணர்வதற்கு இறையுணர்வு முற்பட இருந்து காட்டவேண்டும் என்பர்.

5. பாரதியார் அம்முறையைப்போல் சித்தாந்தசாமி திருக்கோயில் வாயில் தீபவொளி நமக்குப் பல உண்மைகளைக் காட்டுகின்றது என்று பாடுகின்றார்.

**அப்பாடல் உணர்த்தும் உண்மைகளிற் சில :**

1. சித்தாந்த சாமி திருக்கோயிலில் நந்தாவிளக்கு வைக்கப் பட்டிருந்து. அது முன்னர் (இறப்பில்) எரிந்தது; இப்பொழுது (நிகழ்வில்) எரிந்துகொண்டிருக்கிறது, பிற்காலத்தும் (எதிர்வில்) எரியும். இவற்றைக்கருத்தில் வைத்துக் கொண்டு முன்னுவகைப் படும் காலம் நன்று என்பதை முன்ன இடும்சுடராம் என்பர். இது "சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும், இனியெதிர் காலத்தின் சிறப்பும்; இன்றெழுந்தருளப் பெற்றபேறதனல் எற்றைக்குந்திருவரு ளுடையேம்" என்றசேக்கிழார்திருவாக்கை நினைவுபடுத்துகிறது.

2. நாட்டுப்புறத்தில் வாழும் மக்களிற் பலர் நகரவாழ்வின் பகட்டில் மயங்கி நகரத்திற் குடியேறுகின்றனர். அங்ஙனம் குடியேறின் நாட்டின் முக்கியத் தொழிலாகிய உழவுத்தொழில் சிதைவுபெறும். சிதைவுபெற்ருல் உணவிற்குத் திண்டாட வேண்டும்.

" நாட்டுப்புறத் தார்களெல்லாம் நஞ்சைபுஞ்சை வேலைவிட்டுக்
கோட்டுப்போட்டு நகரங்களில் குடியேறிவாழ்க்கைசெய்தால்
உழவு எப்படி ஓங்கும் — நாட்டில்
வறுமை எப்படி நீங்கும்? "

என்பது என்னுடைய பாட்டாகும். எனவே நாட்டுப்புறத்தில் வாழ்பவர் நகரத்தை நோக்கி ஓடுவதும், நகரத்தில் வாழ்பவர் நாட்டுப்புறத்திற் சென்று குடியிருக்கச் சிணுங்குவதும் நாட்டின் நல்ல நிலையைக் கெடுத்துவிடும் என்பதை அறிஞர் கருத வேண்டும்.

திருப்போரூர் தவத்திரு சிதம்பர சுவாமிகள் சென்னைப் பட்டின வாசத்தைவிட முருகன் வாழும் திருப்போரூர் கிராம வாசமே சுகத்தைத் தரும் என்னும் கருத்தினை,

" அளகா புரியன்ன பட்டினத் தேசுதை யால்வனை நந்த
களவார் முகில்படி மாடத்தி னூடு களித்தலினும்
புளகா டவியெழ மெய்ப்போரி வேலவனைப் போற்றியுய்வார்
வளவார் புறந்திண்ணை வைகுதல் ஏதமில் மாசுகமே"

(திருப்போரூர் சந்நிதிமுறை)

என்று கூறியுள்ளார். நாட்டிற்கு நல்லன கூறும் பாரதியா ரவர்கள்

'பட்டினந் தன்னிலும் பாக்கம் நன்றென்பதைப்
பார்க்க ஒளிர்சுடராம் — பெண்ணே!
பார்க்க ஒளிர்சுடராம்''

என்று பாடுகிருர். பாரதியார் பாட்டைப் படிப்பவர்கள் அவர் கூறும் அரிய கருத்தின் உண்மையை உணர்ந்து பட்டினமாகிய நகரத்தில் வாழ்வதைவிடப் பாக்கமாகிய கிராமவாசமே சிறந்த தென்பதைப் பின்பற்ற வேண்டும். அரசியலாரும் கிராமங்களை வாழ்வதற்குத் தகுதியாக மாற்றி அமைக்கவேண்டும்.

பாரதியார் இதனை அடுத்து மற்ருெரு கருத்தினையும் கூறு கிருர்.

" கட்டும் மனையிலும் கோயில்நன் றென்பதைக்
காண ஒளிர்சுடராம் — பெண்ணே!
காண ஒளிர்சுடராம்"

தனி மனிதன் ஒருவனுக்காகக் கட்டப்படும் வீட்டினைக் காட்டிலும் பொதுமக்கள் பலர்க்கும் பயன்படுமாறு அமைக்கப் படும் கோயில் நலம் விளக்கும் என்னும் உண்மையைக் காண்பதற்கு ஒளிரும் சுடராக உள்ளது அத்தீபவொளி என்பது அப்பாட்டின் கருத்தாகும்.

தனிமனிதன் ஒருவன் கட்டிக்கொள்ளும் வீடுபெரும்பாலும் தன்னலம் வளர்வதற்கே இடமாக இருக்கின்றது. கோயில் பல பொதுமக்களுக்குப் பயன்பட்டுப் பொதுநலம் வளர்வதற்கு இடமாக உள்ளது. அதனுல் "கட்டும் மனையிலும் கோயில் நன்று என்று பாரதியார் கருதுகின்ருர்.

## முடிப்புரை :

பாரதியார் பாடல்கள் நல்ல முறையில் ஆராயப்பட்டு அவர்தம் சிறந்த கருத்துக்கள் உலகமெங்கும் பரவ வழிசெய்ய வேண்டும் என்பதை முடிவுரையாகக் கூறுகின்றேன்.



# செய்திகள்

## ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் ஜன்ம நட்சத்திரமாகிய ஆயில்யத் திருநாள் ஆலய வழிபாடும், பாண்டியநாட்டுத்தலம், திருவாப்பனூரிலும், திருப்பரங்குன்றத்திலும், பணிமன்றத் திருமுறை விழாவும் 26—2—83 அன்று கொண்டாடப்பட்டது. காலை திருவாப்பனூரில் ஸ்ரீ ஆப்பனூர் நாதருக்கும், ஸ்ரீ குரவில்கமழ்குழலாளுக்கும் விசேட அபிஷேக ஆராதனை நிகழ்ந்தது. வழிபாட்டுக் கூட்டத்திற்குத் திருவாப்பனூர் திருப்பணிச்செல்வர் திருநாவுக்கரசு முதலியார் தலைமை தாங்கினார். சித்தாந்தக்கலைத் தலைவர் முப்புடாதி முதலியார் வரவேற்றார். புலவர்கள் சி. கல்யாணசுந்தரம், எஸ், நமசிவாயம் பதிக பாராயணம் செய்தனர். பேராசிரியர் ந. சேதுரகுநாதன் பதிக உட்பொருளை விளக்கிப் பேசினார். திருமதி. செல்வ விநாயகம் திருமுறைப் பாடல்களைப் பாடினார். வித்துவான் தா. குருசாமி தேசிகர் நன்றி கூறிய பின்பு அன்பர்களுக்கு " திருவாப்பனூர், திருப்பரங்குன்றம் திருப்பதிகங்கள் " என்ற தலத்திருப்பதிக வெளியீடு வழங்கப்பட்டது.

மாலை, திருப்பரங்குன்றத்தில் ஸ்ரீ பரங்குன்றநாதர் கோவர்த்தனம்பிகை, சுப்பிரமணியசுவாமிகட்குச் சாயரட்சையில் விசேட அபிடேக ஆராதனை நிகழ்ந்தன. பணிமன்ற அன்பர்கள் திருமுறைஓதி வலமாகவந்தனர். திருமுறைவாணர்கள் தி. விசுவநாத ஓதுவார், திருஞானசம்பந்த ஓதுவார் ஆ. சோமசுந்தர ஓதுவார் ஆகியோர் திருமுறைஓதினர். வழிபாட்டுக்கூட்டத்திற்கு மதுரை மாவட்டக் கூட்டுறவுத்துறை அதிகாரி திரு.சு. செல்வ விநாயகம் தலைமைதாங்கினார். புலவர்மணி திரு. தி. கி. சுந்தரமூர்த்தி திருப்பரங்குன்ற வரலாற்றை விளக்கி உரையாற்றினார். பணிமன்றத் துணைச்செயலர் புலவர் திரு. சி. கல்யாணசந்தரம் திருப்பரங்குன்றம் திருப்பதிகநூலை அனைவர்க்கும் வழங்கினார். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமவர்களின் உத்தரவுப்படி பாடல் பெற்றதலங்களில் ஒவ்வொரு ஜன்ம நட்சத்திரத்திலும் நிகழ்வுறும் சமயப் பணியை மக்களுக்கு விளக்கிக்கூறி அன்பர்கள் அனைவர்க்கும் நைவேத்யப்பிரசாதம் வழங்கப்பட்டது. மதுரை

மீனுட்சிசுந்தரர் கோயிலின் நிர்வாகத்திற்குட்பட்ட இரண்டு கோயில்களிலும் நிகழ்ச்சிகள் சிறப்புடன் நடைபெற நிர்வாக அதிகாரியும் தக்காரும் உதவினர். வித்துவான் திரு. தா. குருசாமி தேசிகர் நன்றி கூறிய பின்பு மங்கல வாழ்த்துடன் விழா நிறைவுற்றது. அன்பர் பலர் வழிபாட்டில் கலந்துகொண்டு பயன் பெற்றனர்.

## குருவருளும் அருளுபதேசமும்

ஒவ்வொரு ஆங்கிலமாதத்திலும் முதல் ஞாயிற்றுக்கிழமையன்று, காலை சரியாக 10 மணிக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை அன்பர்கள் வழிபட்டு அருளுபதேசம்பெறும் பிரார்த்தனை வழிபாட்டுக்கூட்டம் தருமையாதீனத் திருமடத்தில் நடைபெற்றுவருகின்றது. இம்மாதம் 6—3—83 அன்று 22 ஆவது சிறப்பு வழிபாட்டுக் கூட்டம் நடைபெற்றது. முதலில் கூட்டுப் பிரார்த்தனை நிகழ்வுற்றது. குருவழிபாடு ஆற்றவும் அருளுபதேசம் பெறவும் சென்னையிலிருந்து ஆவலுடன் வந்திருந்த அன்பர், திரு. ஆங்கிரச. எஸ். வெங்கடேச சர்மா ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் ஆணையின்வண்ணம் "சங்கஇலக்கியங்களிலும் பிற நூல்களிலும் சிவபரத்துவம் பேசப்படுதல் பற்றிய கருத்துக்களை எடுத்துரைத்தார். தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானம் அவர்கள் தமது உபதேசஉரையில் திருத்தொண்டர் புராணச் சிந்தனையாக, வாழ்க்கையை ஒட்டி விளங்கும் சைவ சமயக் கோட்பாடுகளைக் கேட்போர் மனங்கொள்ளுமாறு விளக்கியருளினுர்கள். இம்மாதம் 'இயற்பகை நாயனுர்' புராணம் இனிய சிந்தனையாக மலர்ந்து மணம் பரப்பியது. "இளமை முதற்கொண்டு ஒவ்வொருவரும் குறிக்கோளுடன் வாழ்தல் வேண்டும்; இயற்பகையார், "யாதும் ஒன்றும் என்பக்கல் உண்டாகில் அன்னது எம்பிரான் அடியவர் உடைமை" என்னும் கொள்கையை இடைவிடாது செயற்படுத்தியவர் என்பதை விளக்கியருளினுர்கள். இயற்பகையாரது மனைவியார் கணவனுர் தம்மை அடியார்க்குக்கொடுத்த நிலையில் மனங் கலங்கித் தெளிந்தமையை, ஸ்ரீ குருஞானசம்பந்தர் ஆருரில் ஞானப்பிரகாசரைப் பிரியக்கலங்கிக் குருவாணை மேற்கொண்டு ஒழுகியபாங்கையும், கயிலாயத்தில்பார்வதிதிருமணத்தின்போது சிவபெருமான்கட்டளைப்படி இறைவனைப்பிரிந்துதென்திசைக்கு வர அகத்தியர் மனங்கலங்கிச் சிவனுணையை ஏற்று ஒழுகியமையையும் ஒப்பிட்டு உரைத்த பாங்கு, புதிய சிந்தனையாக இனித்தது. "இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல், குலனுடையான் கண்ணேயுள" என்னும் குறள்நெறி அடியார்வாழ்வில் பொருந்திநின்றநிலையை நன்குதெளிவித்துத்தத்துவக்கோட்பாடு

களுடன் உபதேசித் தருளினார்கள். திருமயிலாடுதுறை நகரப் பெருமக்களும் மெய்யன்பர்களும் கலந்துகொண்டு பயன் பெற்றனர்.

அடுத்த அருளுபதேசம் 3—4—83 அன்று நிகழ்வுற இருக்கின்றது. அன்பர்கள் கலந்து கொண்டு குருவழிபாடு ஆற்றி அருளுபதேசம் பெற்றுப் பயன் பெறுவார்களாக.

## விளையாட்டுவிழா, இலக்கியமன்ற ஆண்டுவிழா

தருமையாதீனக் கல்வி நிலையங்களுள் ஒன்றாகிய ஸ்ரீ குரு ஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளியில் இலக்கியமன்ற ஆண்டு விழாவும், ஆண்டு விளையாட்டு விழாவும், சிறப்பானமுறையில் நடைபெற்றது. 5—3—83சனிக்கிழமை காலை 7-30மணி அளவில் தருமையாதீனக் கல்வி நிலையங்களின் செயலாளர் திரு. எஸ். இரத்தினசபாபதி பிள்ளை அவர்கள் தேசியக் கொடி ஏற்றி விழாவைத் துவக்கிவைத்தார்கள். தொடர்ந்து 9-30 மணி வரை விளையாட்டுப்போட்டிகள் நிகழ்வுற்றன, பிற்பகல் 3 மணிக்கு மீண்டும் விளையாட்டுப்போட்டிகள் நடைபெற்றன. 5 மணியளவில் மயிலாடுதுறை, துணைக்காவல் கண்காணிப்பாளர் திரு. ஏ. ஜே. பரமானந்தம், எம். ஏ., அவர்கள் தலைமையில் இலக்கியமன்ற விழா நிகழ்வுற்றது. தலைவர் தமது உரையில் "மாணவர்கள் தெய்வபக்தியும், குருபக்தியும் கொண்டுவிளங்க வேண்டும்" என்னும் கருத்தை விளக்கிப் பேசினார். தருமையாதீனப் பல்கலைக் கல்லூரித் துணைப்பேராசிரியர் திரு. சா. கிருட்டினமூர்த்தி, எம்.ஏ., சிறப்புரையாற்றியபோது பாரதிதாசன் கவிதைகளில் பெண்கல்வி பற்றியும் கல்வியின் இன்றியமையாமை பற்றியும் உள்ள கருத்துக்களை விளக்கிப் பேசினார். பெற்றோர்களும் பழைய மாணவர்களும், பள்ளிமாணவர்களும் விழாவில் கலந்து கொண்டனர்.

## திருபுவனத்தில் குருபூஜை விழா

தருமையாதீனம் 17 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் குருபூஜைவிழா 2—3—83 புதன்கிழமை திருபுவனம் சந்நிதி வீதியில் உள்ள குருமூர்த்த ஆலயத்தில் மிகச்சிறப்பாக நடைபெற்றது. காலை மாலை இருவேளைகளிலும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. நண்பகல் மாகேஸ்வர பூஜை நிகழ்வுற்றது. மாலை 6 மணி அளவில் திருப்பனந்தாள் தமிழ்க்

கல்லூரி தமிழ்த் துணைப் பேராசிரியர், வித்துவான் திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்கள் 'குருவழிபாடு' என்னும் பொருளில் சொற்பொழிவு ஆற்றினர்கள். அன்பர் பலர் வந்திருந்து குருவழி பாடு ஆற்றியும் சொற்பொழிவினைக் கேட்டும் பயன்பெற்றனர்.

## திருக்குறுக்கையில் மாசிமகஏகதின உற்சவம்

தருமையாதீனத்திற்குச்சொந்தமான - அட்டவீரட்டத்திருத் தலங்களுள் ஒன்றான - திருக்குறுக்கை அருள்மிகு ஞானம்பிகை உடனுகிய ஸ்ரீ வீரட்டேசுவரசுவாமி தேவஸ்தானத்தில் மாசிமக ஏகதின உற்சவம் மாசித்திங்கள் 14 ஆம் நாள் 26—2—1983 சனிக்கிழமையன்று சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ காமதகன மூர்த்திக்கும் பஞ்சமூர்த்திகளுக்கும் விசேஷ அபிஷேக அலங் கார ஆராதனைகள் நடைபெற்றன. இரவு பஞ்சமூர்த்திகள் திருவீதியுலாக்காட்சி நடைபெற்றது. அன்பர் பலர் தரிசித்துப் பயன்பெற்றனர்.

## திருக்குவளையில் நெல் மகோற்சவம்

தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருக்குவளை என்னும் திருக்கோளிலி ஸ்ரீ தியாகராஜ சுவாமி தேவஸ்தானத்தில் நெல் மகோற்சவம் 25—2—83 வெள்ளி முதல் 1—3—83 செவ்வாய் வரை மிகச் சிறப்பாக நடைபெற்றது. திருக்கோளிலிப்பதியில் வீற்றிருந்தருளும் எம்பெருமான் ஆலயத்தில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குக் குண்டையூர்க் கிழார் தந்தருளிய நெல் மலையைச் சுவாமிகள் ஆரூருக்கு அட்டித்தருமாறு ஆளிட வேண்டிக்கொண்டபடி, இறைவர் ஆணையால் பூதகணங்கள் எடுத்துச்சென்றது முதலிய அற்புத வைபவங்கள் இம்மகோற் சவத்தில் நடைபெற்றன. 28—2—83 திங்கட்கிழமையன்று நெல் மலையை ஆரூருக்குச் சேர்ப்பிக்க இறைவர் கட்டளை இடும் உற்சவம் மிகச்சிறப்பானமுறையில் நடைபெற்றது. பக்தர்கள் திரளாக வந்திருந்து, தரிசித்துப் பயன்பெற்றனர்.

## சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில் நாயன்மார்குருபூஜை

இயற்பகை நாயனர், மானக்கஞ்சாற நாயனர், சாக்கிய நாயனர், அப்பூதியடிகள், கலிக்காம நாயனர், கண்ணப்ப நாயனர், அரிவாட்டாய நாயனர், ஆகிய நாயன்மார்களின் குரு பூஜை முறையே 1983 ஜனவரி 5, 8, 13, 17, 20, 25, 26 தேதிகளில் நிலையபூஜைமடத்தில் நடைபெற்றது. புலவர் திரு. K. ஆறுமுகம்

பெரியபுராணம் வாசித்து விளக்கவுரை நிகழ்த்தினர்கள். ஸ்ரீ அப்பர் குருகுல மாணவர்களும் நிலைய அன்பர்களும் கேட்டுப்பயன்பெற்றனர்.

## சோமவாரக் கயிலைப் பிரார்த்தனை

1983 ஜனவரி 3, 10, 17, 24, 31 ஆகிய சோமவாரத் தேதிகளில் நிலைய பூஜை மடத்தில் கயிலைப் பிரார்த்தனை நடைபெற்றது. நிலைய ஓதுவார், ஸ்ரீ அப்பர் குருகுல மாணவர்களுடன் கயிலைப் பதிகங்கள் பாடி, தீபாராதனைசெய்து, பஞ்சபுராணம் பாடி, வழிபாடு செய்யப்பெற்றது. பிரார்த்தனையில் நிலைய அன்பர்களும் கலந்து கொண்டார்கள்.

## 1983 புத்தாண்டு விழா

1983 புத்தாண்டு விழா 1—1—83 தேதி சனிக்கிழமை மாலை 5 - 30 முதல் 9 - 00 மணிவரை நடைபெற்றது. சேலம், டாக்டர் S. ஜெயலட்சுமி, பக்கவாத்தியங்களுடன் திருமுறை இசைக் கச்சேரி நிகழ்த்தினர்கள். விழாவிற்குத் தலைமை வகித்துப்பேசிய சென்னை வழக்கறிஞர் திரு. P. A. தெய்வசிகாமணி, விழாவில் கலந்து கொண்ட மலேசிய அமைச்சர் திரு. T. சுப்பையா, சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி கனம் திரு G. மகேஸ்வரன், தமிழ்நாடு முன்னுள் அமைச்சர் திரு. பூவராகன், மற்றும் கயப்பாக்கம் திரு. K. முத்துலிங்க ரெட்டியார், திரு. M. R. தாமோதர முதலியார், திரு. K. V. கமலநாபன் ஆகியோருக்கும், விழாவிற்கு வந்திருந்த இதர அன்பர்களுக்கும் புத்தாண்டு வாழ்த்துத் தெரிவித்து வரவேற்றுப் பேசினர்கள். விழாவில் பேசிய நீதிபதி கனம் திரு. G. மாகேஸ்வரன் தமிழ்நாடு முன்னுள் அமைச்சர் திரு. பூவராகன் . ஆகியோர் தருமையாதீன சமயப் பிரசார நிகழ்ச்சிகளை மிகவும் பாராட்டிப் பேசினர்கள்.

மலேசியா அமைச்சர் திரு. T. சுப்பையா பேசுகையில், "மலேசியா நாட்டு அரசு எல்லாமதத்தினரையும் சமநோக்கோடு கருதி, சமயவளர்ச்சிக்கு எல்லா உதவிகளையும் செய்கிறது" என்று சொல்லி, சென்னையில் தருமபுர ஆதீன பிரசார மண்டபம் கட்டுவதற்கு மலேசியா அரசுசார்பில் ரூ. 5000 — 00 நன்கொடை வழங்குவதாகவும் வாக்களித்தார். திரு. K. முத்துலிங்கரெட்டியார், திரு. தாமோதர முதலியார், திரு. K. V. கமலநாபன் ஆகியோரும் பிரசார மண்டபம் கட்டுவதற்கான முயற்சியில் எல்லோரும் ஈடுபடவேண்டும் என்று கேட்டுக்கொண்டார்கள். திரு. தாமோதர முதலியார், ரூ. 1000—00 நன்கொடை வழங்கத் தீர்மானித்துள்ளதாகவும் அறிவித்தார்.

## பொங்கல் புதுநாள் விழா

இவ்விழா 14—1—1983 வெள்ளிக்கிழமை பொங்கல் தினத்தன்று மாலை, நிலையத்தில் நடைபெற்றது. திரு. நல்லி குப்புசாமி செட்டியார், விழாவைத் துவக்கி வைத்து ஆதீனங்களுக்கும் கோயில்களுக்கும் அனைவரும் தொண்டு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள்.

விழாவிற்கு தலைமைவகித்து பேசிய டாக்டர். S. சிவகுமார் தமிழகத்தில் பொங்கல் திருநாள்பற்றிச் சிறப்பாகக் கூறி அமெரிக்காவில் உள்ளவர்கள் இந்து சமயப் பெருமையினையும் சைவசித்தாந்தக் கோட்பாடுகளையும் அறிந்து கொள்ள துடிப்புடன் இருக்கிறார்கள். என்றும் அவர்கள் புரிந்துகொள்ளும் வண்ணம் சைவ சித்தாந்த நூல்களை ஆங்கிலத்திலும், அருந்தமிழிலும் அச்சடித்து அடக்கவிலைக்குக் கொடுத்தால் அவர்கள் எளிமையில் புரிந்து கொள்வார்கள் என்றும் கூறினார்கள்.

சிறப்புரை யாற்றிய திரு. G. வடிவேலாயுதம், தமிழர்கள் பண்டைக் காலம் தொட்டு இக்காலம்வரை, இந்திரன், சூரியனுக்கும், நமக்குதவும் மாடு கன்றுகளுக்கும் பொங்கலிட்டு வழிபாடாற்றியிருக்கிறார்கள். அதற்குச் சங்க இலக்கியமாகிய புறநானூற்று பிட்டன் கொற்றன்என்பவர் காட்டுப்பன்றிகளால் உழுத புழுதியில் சாமை முதலான தானியங்களை விதைத்து அறுவடை செய்து காட்டுப்பசுவின் பாலை உலையாகப் பெய்து பொங்கலிட்டுவாழைஇலையில்படைத்துச் சுற்றத்தார் அனைவரும் கூடியிருந்து பொங்கல் விழாவைச் சிறப்பாகக் கொண்டாடினார்கள் என்று காணப்படுவதால், நாமும் பொங்கல் விழாவைச் சிறப்பாகக் கொண்டாடினால் சைவத்திற்கும் இறையருளுக்கும் நாம் பெருமை கொடுத்தவர்களாவோம் எனக் கூறினார்கள்.

## கிருத்திகைப் பிரசாதம் வழங்கும் விழா

இவ்விழா 25—1—83 செவ்வாய்க்கிழமை மாலை நிலையத்தில் நடைபெற்றது. ஸ்ரீ செல்வமுத்துக்குமரா சுவாமி படத்திற்கு அர்ச்சனை செய்தபிறகு திரு. என். இராமமூர்த்தி அய்யரும் திரு. டி. சபாரெத்தின தேசிகரும் வேளூர்ப் பதிகங்களையும் முருகன் நாமாவளிகளையும் பாராயணம் செய்தார்கள்.

விழாவில் சிறப்புரையாற்றிய திரு. பி. இராஜேந்திரன், மனித இனம் உய்வதற்கு ஆலயம் இன்றியமையாததாகும்; நாம் ஒரு உருவத்தை வைத்துத்தான் படிப்படியாக முன்னேற வேண்டும்; ஞானிகளுக்கு அது தேவையில்லை; ஆலயத்தில்

இருக்கின்ற உருவங்களில் இறைவனை எழுந்தருளப்பண்ணி நாம் வழிபடுகின்றோம். எண்கண் என்ற தலத்தில் உள்ள முருகப்பெருமானை சிற்பி வடிக்கின்றபோது மயிலானது முருகப் பெருமானை எடுத்துப் பறப்பது போன்ற காட்சி அவனுக்குத் தோன்ற அதன் கால்களிலே சங்கலித் தளையிட்டும், நகம் ஒன்று ஒடிந்தது போன்றும் சிற்பி வடித்துள்ளான். அதனாலே முருகப்பெருமான் அங்கிருந்து அருள்புரிகிறான் என்று கூறுவர். ஆன்மாவாகிய யானையை கந்தப்பெருமான் தன் திருவடியில் கட்டுப்பட்டு இருக்கச் செய்வதால், கந்தன் எனப்பெயர் பெற்றான். அத்தகை இறைவன் வேளூரில்எழுந்தருளியுள்ளன். அவன் பிரசாதம் ஆன்ம வெப்பத்தைப் போக்கி அருள் உணர்வைத் தரவல்லது. அவனை வழிபட்டு நாம் எல்லோரும் உய்யவேண்டும் என்று கூறினார்கள்.

## மாதாந்தர சமயப் பிரசார வழிபாடு

இம்மாத சமயப் பிரசார வழிபாடு 30—1—83 ஞாயிற்றுக் கிழமை மாலை சென்னை நுங்கம்பாக்கம் ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி சமேத ஸ்ரீ அகஸ்தீஸ்ரர் கோயிலில் நடைபெற்றது. வழிபாட்டின் விசேஷ அம்சமாக சுவாமிக்கும் அம்பாளுக்கும் அபிஷேக ஆராதனைகள் செய்யப்பெற்றது. இதரமூர்த்திகளுக்கு அர்ச்சனை செய்யப்பெற்றது. வழிபாட்டின்போது நிலைய ஓதுவார் டி. எஸ். தண்டபாணி தேசிகரும் திரு. என். இராமமூர்த்தி அய்யரும் திருமுறைப் பாராயணம் நிகழ்த்தினர். வழிபாட்டிற்குப் பிறகு சமயப் பிரசாரக் கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு திரு. வி. என். ஆறுமுக முதலியார் தலைமை வகித்தார்கள்.

திரு துரைராஜ் பேசுகையில், "சைவ சமயத்தைச் சேர்ந்த பெருமக்கள் அனைவரும் பிரதோஷ காலத்தைச் சிறப்பாக அனுஷ்டித்து வழிபடவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். அடுத்துப்பேசிய நிலைய அன்பர் திரு. என். இராசு கூட்டுவழி பாட்டின் சிறப்பினைக்கூறி தருமையாதீனத்தால் நடத்தப்படுகிற இவ் நிகழ்ச்சிகளில் தவறாமல் பங்குகொள்வதற்குப் பெருமைப் படுகிறேன் என்று கூறினர். மற்றொரு நிலைய அன்பராகிய பொறியியல் வல்லுனர் திரு. வி. சேகர் தேவார இன்னிசையை அனைவர் மனமும் கவரப்பாட வேண்டும் என்றும் தமிழகத்தில் உள்ள பழுதுபட்டுள்ள திருக்கோயில்கள் அனைத்தையும் குட முழுக்குநீராட்டுச் செய்ய ஆங்காங்கு உள்ள மக்களைத் தூண்ட வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்.

திரு. வி. க. கிருஷ்ணன் இறைபணிப் பெருமைகளைத் திருக் குறளின் துணைகொண்டு விரிவாகச் சொல்லித் தருமையாதீனத் தால் நடத்தப்பெறும் இம்மாதிரியான இறைவழிபாடுகளில்

எல்லோரும் கலந்துகொண்டு உய்ய வேண்டுமென்று தனது உரையில் கூறினர்.

கூட்டத்திற்குத் தலைமை வகித்த திரு. ப. N. ஆறுமுக முதலியார் பேசியதாவது: தருமையாதீனம் நடத்துகின்ற இந்த 287-வது வழிபாடு சிறப்பாக அமைந்திருக்கின்றது. அடுத்த ஆண்டு பிப்ரவரித் திங்களில் நடைபெறவிருக்கும் 300-வது வழிபாடு 25 ஆண்டு பூர்த்தியைக்குறிக்கும். அந்த வழிபாட்டை முதலாவது வழிபாடுநடந்த சைதை ஸ்ரீ காரணீஸ்வரர் ஆலயத்தில்25ஓதுவா மூர்த்திகளைவைத்துச்சிறப்பாகக்கொண்டாடவேண்டும்.அதற்கு நிலைய அன்பர்கள் அனைவரும் தங்கள் தங்களால் ஆன ஒத்துழைப்பினை நல்கித் தருமையாதீனத்திற்குச் சைவ சமயத்திற்கும் பெருமை சேர்க்குமாறு கேட்டுக்கொண்டார்.

புலவர் திரு. K. ஆறுமுகம் நன்றிகூறுகையில் 25-வது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களால் தொடங்கப்பெற்ற மாத வழிபாட்டின் வெள்ளி விழாவாக 1984 பிப்ரவரி மாத வழிபாட்டைச் சிறப்பாக நடத்த வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

---

## கடிதம்.

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் கமலத்திருவடிகளை வணங்கிச் சிறியேன் செப்பும் விண்ணப்பம், நான் ஆரம்பப்பள்ளி ஆசிரியனக 33 ஆண்டுகளாகப் பணிபுரிந்துவருகிறேன். என்மகளுக்கு ஏற்பட்ட நோய் காரணமாய் நான் 108 சிவதலங்களை வழிபட்டுப் பின்பு மாதந்தோறும் திருப்புள்ளிருக்குவேளூர் ஸ்ரீவைத்தியநாதசுவாமியை வழிபட விரதம் பூண்டேன். துந்துபிஞ் தைமீ கிருத்திகைமுதல் ஸ்ரீ வைத்திய நாதசுவாமியை வழிபட்டுவருகிறேன், என்குழந்தைக்கு உள்ள நோய் சூரியனைக்கண்ட பனிபோல் விலகிவருகிறது என்பதையும் சிறியேன் தெரிவித்துக்கொள்கிறேன்.

6 வருடகாலமாக அதிகாலையில் எழுந்து நீராடித் திருமுறை திருப்பாடல்களைத் திருவிளக்கின் முன்வைத்து மலர் இட்டுப் பஞ்சாட்சர மந்திரத்தைச் சொல்லித் தினமும் வழிபடுகிறேன். மாணவர்களுக்குச் சிவத்தின் பெருமையை எடுத்து விளக்கிக் கூறியும்வருகிறேன், ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் கமலத்திருவடிகளை வணங்கி அருளாசிபெற அருள்புரியவேண்டுகிறேன்.

**M. பிச்சையன்.**

26—2—83. ஆனைக்குப்பம்.




**ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்**

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

(துந்துபிஸு பங்குனிமீ 1உ முதல் 30உ முடிய)
(15—3—1983 முதல் 13—4—1983 முடிய)

| | | | |
|---|---|---|---|
| சூ சுக் செ | | | ரா |
| சந் பு | இராசி | | |
| | | | |
| கே | கு | ல/ சனி | |

| | | | |
|---|---|---|---|
| சு | ல/ | கே | பு சந் |
| | அம்ஸம் | | சூ |
| செ | | | |
| கு சனி | ராகு | | |

ஸ்ரீ துந்துபிவருடம் மாசிமாதம் 30உ சோமவாரம் பூரட்டாதி நக்ஷத்திரம் நாகவகரணம் கூடிய காலத்தில் சூரிய உதயாதி 38நாழிகை 42வினடிக்குத் துலா லக்னத்தில் ஸ்ரீஉலகரட்சகரான சூரிய பகவான் கும்பராசியிலிருந்து மீனராசி சங்கிரமணமாக துந்துபிவருட சௌரமான பங்குனி மாதப்பிரவேசம் செய்தருளுகின்றார். அன்று அமாசோமோ பிரதக்ஷணம். மறுதினம் மங்களவாரம் பங்குனிமீ முதல் தேதியாகிறது. சங்கிரமண கால கிரகஸ்திதியின் பலனாவது லோகில் எங்கும் சமூக சேவாஸ் தானங்களில் ஆன்றோர்களின் திருவுளப்படி பிரஜைகளின் நன்மைக்காகத் திட்டங்கள் வகுத்து நடைமுறைக்குவரும். பிரஜைகள் ஆக்கப்பணிகளில் நல்லஊக்கத்துடன் செயல்பட்டு மேலான செல்வம் பெறுவர். தேசங்களில் இயந்திர சாதனங்களினால் நவீன பொருள்களின் உற்பத்தி அதிகரித்து வந்து மக்களின் உபயோகத்துக்குவரும். நாடுகளில் ஆளுநர்கள்

இறைவன்திருவருளினால்உத்தமர்கள்,ஞானிகள்,தீர்க்கதரிசிகள், அறவுரைகளின் வழிநின்று துலாக்கோல் நிகராக நடுவுநிலைமையில் மனுநீதியாக ஆட்சிபுரிந்து பிரஜைகளை இரட்சிப்பார்கள்.

உலகெங்கும் உள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் சிவராஜயோகத்தில் திருவீற்றிருந்து மிளிர்கின்ற சிவஞானகுரு மகான்கள் குருமகாசந்நிதானங்கள் லோகத்திற்கு சைவ சித்தாந்தம், வேதம், சாஸ்திரம்இவற்றின்உயர்வை, தம்திருவாய் மலர்ந்து இயம்பி அருள்வார்கள். உலகில் எங்கும் சிவ சமயம் பரவும். தேசங்களில் எங்கும் தேவாலயங்களில் நித்தியம் ஆறு காலபூசைகள் விசேஷகால உற்சவ வைபவங்கள் ஆலய நிர்வாக உத்தமர்களின் தெய்வீகத்தன்மையில் சிறப்பாக நடைபெறும். எல்லாப்பிரஜைகளும் தெய்வபக்தியில்சிவாலயம் சென்று சர்வேஸ்வரனைவழிபட்டுமனவமைதியாக நல்வாழ்க்கை நடத்துவர்.

1. மேஷம் :- அசுவதி – பரணி. கார்த்திகை – ¼
(சு. சே. சோ. லா. – லி. லு. லே. லோ. – அ.)

மேஷராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானம் வந்து கொண்டிருக்கும். சகோதரருக்கு உஷ்ண நலிவு ஏற்பட்டு உடன் குணமாகும். வீடு வாகனங்களில் சீர்திருத்தம் ஏற்படும், அறிஞர்களின் சந்திப்பு கௌரவம் மேலிடுதல் ஆகும். வித்தியா வியாபாராதிகளில் விளம்பரமும் முதலீடும் ஆகும், தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். மார்ச்சு 17, 18, 19, 22, 23, 28, 29, 30, 31, ஏப்ரல் 6, 7, 8, 9, 10 தேதிகளில் தனதாயம், தெய்வ தரிசனம், இஷ்டசித்தி ஆகிய நற்பலன்களாகும். ஏப்ரல் 1, 2, 3 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

2. ரிஷபம் :- கார்த்திகை ¾ – உரோகிணி – மிருகசீர்ஷம் ½
(இ. ஊ. ஏ. – ஒ. வ. வி. வு. – வே. வோ.)

ரிஷபராசி 9 பாதங்களும் சுபபலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் எல்லாப் பிரச்சினைகளையும் சரிசெய்வதற்குப் பணவருமானங்களில் நல்லஸ்திதியை ஏற்படுத்திவரும். இல்லத்தில் சுப நிகழ்ச்சிகள் நடக்கும். இஷ்டமித்திரபந்துக்கள் வருகை உபசரணை நடக்கும், வீடுவாகனபிராப்தியில் புதிய ஏற்பாடுகளைச் செய்யும், புத்திரர் மனைவியின் நலன்களுக்கு முதலீடு

செய்யும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும், மார்ச்சு 15, 16, 20, 21, 24, 25, 30, 31, ஏப்ரல் 1, 2, 3, 9, 10, 11, 12, 13 தேதிகளில் தனவரவு, சுப நிகழ்ச்சி, காரியஜெயம் ஆகிய நற்பலன் தரும். ஏப்ரல் 4, 5, 6 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன்தரும்.

3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை – புனர்பூசம் ¾
(கா. கி. – கு. க. ஸ. ச்சா. – கே. கோ. ஹ.)

மிதுனராசி 9 பாதங்களும் சுபமானபலனைத்தரும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானங்கள் கெடியானதோரணைக்கு ஏற்ப வந்து கொண்டிருக்கும். பொன்மணிபூஷணம் தரும். வித்தியாவியாபாராதி கலைத்துறைகளில் நல்லஸ்திதியை ஏற்படுத்தும். வீடு வாகனப் பிராப்தியில் நல்ல சௌகரியம் தரும். புத்திரர்களின் தொழில்துறை சிறந்து விளங்கும், தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். மார்ச்சு 15, 16, 17, 18, 19, 26, 27, ஏப்ரல் 1, 2, 3, 4, 5, 6, 11, 12, 13 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஏப்ரல் 7. 8 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன்தரும்.

4. கடகம் :- புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்.
(ஹி. – ஹு. ஹே. ஹோ. ட. – டி. டு. டே. டோ.)

கடகராசி 9 பாதங்களும் சுபமானபலனைத்தரும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானம் நல்லவிதத்தில் வரவாகிக் கொண்டிருக்கும். இயந்திரசாதனங்களில் விருத்திபலன் ஏற்படும். வித்தியாவியாபாராதி கலைத்துறைகளில் எழுத்துமூல விஷயங்களில் ஏப்ரல் 4 தேதிக்கு விசேஷ நன்மைகளை ஏற்படுத்தும். எல்லாக்காரியங்களும் மதிநுட்பத்தில் கெடியாக நடந்துக்கொண்டிருக்கும், தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். மார்ச்சு 17, 18, 19, 20, 21. 23 24, 25, 28, 29, ஏப்ரல் 4, 5, 6, 7, 8 தேதிகளில் தனுதாயம், காரியசித்தி, பிரசித்தம், உற்சாகம் ஆகிய நற்பலன்தரும். ஏப்ரல் 9, 10 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன்தரும்.

5. சிம்மம் :- மகம் – பூரம் – உத்திரம் ¼
(ம. மி. மு. மே. – மோ. ட. டி. டு. – டே.)

சிம்மராசி 9 பாதங்களும் சுபபலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானம் தக்க சந்தர்ப்பத்தில் வந்து சேரும். சம்பிரதாயமாக உள்ள விசேஷங்களைச் சிறப்புடன்

நடத்துதல் ஆகும். வாகனசுகம் திருப்தியளிக்கும். நல்லோர் பிரபலஸ்தர் நேசம் ஏற்படும். எல்லாகாரியங்களையும் திடசித்த மாக நடத்த ஊக்கம்தரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். மார்ச்சு 20. 21, 22, 23, 26, 27, 30, 31, ஏப்ரல் 1, 7, 8, 9, 10 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களை யளிக்கும். மார்ச்சு 15, 16, ஏப்ரல் 11, 12, 13 தேதிகள் சந்திராஷ் டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

6. கன்னி :– உத்திரம் ¾ – ஹஸ்தம் – சித்திரை ½

(டோ. ப. பி. – பு. ஷ. ண. ட. - பே. போ.)

கன்னியாராசி 9 – பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் பணவருமானம் கணிசமாகவந்துகொண் டிருக்கும். அதற்கேற்ற செலவினங்களும் இருந்துவரும் இவ்ராசிக்கு நீர்எரிச்சல், நரம்புத்தளர்ச்சிபோன்ற உஷ்ண நலிவு ஆகி குணமாகும், வீடுவாகனபிராப்தியில் நல்ல சௌகரியம் இருந்துவரும்,வித்தியாவியாபாராதிகளில் கலைத்துறையில்ஏப்ரல் மாதம் முதல் விசேஷ நற்பலன் வந்துசேரும். தாரபுத்திரர் களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். மார்ச்சு 15, 16, 22, 23, 24, 25, 28, 29, ஏப்ரல் 2, 3, 9, 10, 11, 12, 13 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். மார்ச்சு 17, 18, 19 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன்தரும்.

7. துலாம் :– சித்திரை ½ – சுவாதி - விசாகம் ¾

(ர. ரி. – ரு. ரே. ரோ. தா. – தி. து. தே.)

துலாராசி 9 பாதங்களும் சுபபலனுக நடக்கும். நல்ல பண வருமானம் தரும். வித்தியாவியாபாராதிகளில் நற்பலன்கள் ஏற்பட்டுக்கொண்டிருக்கும். குடும்பத்தில் சுப விசேஷங்கள் நடக்கும். சகோதரருக்கு உயர்வுதரும். வீடுவாகனபிராப்தி யில் புதிய ஏற்பாடுகளைச் செய்துவரும். ஏப்ரல் 10 தேதிக்கு மேல் இருப்பிடத்தில் சில நன்மைகளை ஏற்படுத்தும். தார புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். மார்ச்சு 15, 16, 17, 18, 24, 25, 26, 27, 30, 31, ஏப்ரல் 4, 5, 9, 10, 11, 12, 13 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். மார்ச்சு 20, 21 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன்தரும்.

8. விருச்சிகம் :– விசாகம் ¼ – அனுஷம் – கேட்டை.

(தோ. - ந. நி. நு. நே. – நோ. ய. யி. யு.)

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும் குடும்பாபி விருத்தியில் நல்ல பணவருமானம் வந்துகொண்

டிருக்கும். பூமியில் இயந்திர சாதனங்களில் அதிகபணம் முடங்கும். அலுவல்களில் அரசாங்கநிர்பந்தம் இருந்துவரும். ஞாயிற்றுக்கிழமை சூரியார்ச்சனை செய்ய நல்ல பலன் ஏற்படும். பத்திரவிகிதங்களில் ஏப்ரலில் நல்லன ஏற்படச் செய்யும். தார புத்திரர்களன் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். மார்ச்சு 17, 18, 19, 20, 21, 26, 27, 28, 29, ஏப்ரல் 1, 2, 3, 7, 8 தேதிகளில் தனுதாயம். காரியஜெயம் புதுமைவஸ்து பிராப்தி ஏற்படும். மார்ச்சு 22, 23 தேதிகள் சந்திராஷ்டமம் மற்றதேதிகளில் மத்திம பலன் தரும்.

9. தனுசு :- மூலம் - பூராடம் - உத்திராடம் $\frac{1}{4}$
( யே, யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே. )

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பண வருமானம் வந்து கொண்டிருக்கும். சுபகாரியங்களில் நல்ல விதத்தில் செலவும் செய்யும். எல்லா அலுவல்களும் அரச நிர்ப்பந்தத்தில் விரைவாக நடைபெறும். அடிக்கடி வெளியூர்ப் பயணம் ஏற்படும். புத்திரர் அல்லது புத்திரிக்கு நல்லன ஏற்படும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். மார்ச்சு 19, 20, 21, 22, 23, 28, 29, 30, 31 ஏப்ரல் 1, 4, 5, 9, 10 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களை யளிக்கும். மார்ச்சு 24, 25 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

10. மகரம் :- உத்திராடம் $\frac{3}{4}$ - திருவோணம் - அவிட்டம் $\frac{1}{2}$
( போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி. )

மகரராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும் குடும்பாபி விருத்தியில் நல்ல தனவருமானம் வரும். பொன்மணி பூஷணம் தரும். வீடுவாகனங்களில் நல்ல சௌகரியம் தரும். ஏப்ரல் முதலில் எழுத்துமுல விஷயங்களில் நல்ல பிரயோஜனம் வந்து சேரும். எல்லா வழியிலும் இலாபப்பிராப்தியாக இருந்து வரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்து வரும். மார்ச்சு 15, 16, 22, 23, 24, 25, 30, 31 ஏப்ரல் 1, 2, 3, 7, 8, 11, 12, 13 தேதி களில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். மார்ச்சு 26, 27 தேதி கள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

11. கும்பம் :- அவிட்டம் $\frac{1}{2}$ - சதயம் - பூரட்டாதி $\frac{3}{4}$
( கு. கே, - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா. )

கும்பராசி 9 பாதங்களும் சுபமானபலனைத்தரும். குடும்பாபி விருத்தியில் பணவருமானங்களில் நல்லஸ்திதியை ஏற்படுத்திக்

கொண்டிருக்கும். இரத்தினபூஷணம் தரும். வாகனசுகம் திருப்தி யளிக்கும். அரசகாரியங்கள் செவ்வையாக நடந்துகொண்டிருக்கும். உயர்வும் மற்றவர்களால் புகழப்படுவதும் ஆகும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். மார்ச்சு 17, 18, 19, 24, 25, 26, 27 ஏப்ரல் 2, 3, 4, 5, 9, 10 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். மார்ச்சு 28, 29 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

12. மீனம்:– பூரட்டாதி ¼ – உத்திரட்டாதி – ரேவதி.

( தி. – து. ஸ. ச. த. – தே. தோ. ச. சி. )

மீனராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவருமானம் வந்துகொண்டிருக்கும். அவசர வார்த்தைகளில் சொற்ப மனசங்கடம் வந்து ஆறுதல் ஆகும். உத்தியோகத்தில் அலுவல்கள் சுமந்து இருப்பினும் அவ்வப்போது பூர்த்தி செய்யும் ஆற்றல் தரும். இதுவரைவராதிருந்த பொருளில் அதிகப்பிரயாசை மேற்கொள்வதில் தக்கவர்களால் அனுகூலம் தரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்து வரும். மார்ச்சு 15, 16, 17, 20, 21, 26, 27, 28, 29 ஏப்ரல் 4, 5, 6, 7, 8, 11, 12, 13 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். மார்ச்சு 30, 31 தேதிகள் சந்திராஷ்டமம் மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

## சிவலிங்கம்

சுயம்பு லிங்கம், காண லிங்கம், தைவிக லிங்கம், ஆரிட லிங்கம், மானுட லிங்கம் என ஐவகைப்படும். இவைகளுள்ளே, சுயம்பு லிங்கமானது தானே தோன்றியது. காண லிங்கமாவது விநாயகர் சுப்பிரமணியர் முதலிய கணர்களாலே தாபிக்கப்பட்டது. தைவிக லிங்கமாவது விட்டுணு முதலிய தேவர்களாலே தாபிக்கப்பட்டது. ஆரிட லிங்கமாவது இருடிகளால் தாபிக்கப்பட்டது. அசுரர், இராக்கதர் முதலாயினரால் தாபிக்கப்பட்டதும் அது, மானுட லிங்கமாவது மனிதரால் தாபிக்கப்பட்டது. மானுட லிங்கத்தின் உயர்ந்தது ஆரிட லிங்கம்; அதனின் உயர்ந்தது தைவிக லிங்கம்; அதனின் உயர்ந்தது காண லிங்கம்; அதனின் உயர்ந்தது சுயம்பு லிங்கம்.

# நெஞ்சம் நிறைந்தது

வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன் எம். ஏ.

[தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் 6—3—'83 முதல் ஞாயிற்றுக்கிழமை யன்று அருளுபதேசத்தில் அருளிய கருத்துக்களை ஒட்டி எழுதப்பெற்ற கட்டுரை.]

இன்று முதல் ஞாயிறு! மனம் மகிழ்ச்சியில் துள்ளிற்று. விடுமுறைநாள் என்பதாலா? அன்று; அன்று; பின் என்ன?

ஆங்கிலமாத முதல் ஞாயிறு அல்லவா இது; இன்று தருமை யாதீனத் திருமடத்தில் குருவை வழிபடலாமே! உபதேசம் பெறலாமே!

காலை சரியாக மணி பத்து. ஆதீனப் பண்டாரக்கட்டில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் சித்ராசனத்தில் எழுந் தருளி வீற்றிருக்கின்றார்கள்! அன்பர்கள் வணங்கி வழிபடு கின்றார்கள்! நீறுபெற்று நிம்மதிகொள்கின்றார்கள்! எல்லாரும் அமர்கின்றார்கள்.

இடப்புறத்தில் – எதிரில் – சற்றேதள்ளி அமர்ந்திருப்போர் திருமுறைகற்ற ஓதுவாமூர்த்திகள். வலப்புற ஓரத்தில் வேதங் களும் ஆகமங்களும்கற்ற அந்தணர்கள். நேர் எதிர்ப்புறம் அடக்கத்துடன் அமர்ந்திருக்கின்றனர் அன்பர்கள்–ஆசிரியர்கள் மாணவர்கள். அடுத்த பகுதியில் – பார்வையிலிருந்து கொஞ்சம் விலகியவாறு ஆதீன அலுவலர்கள் – இதுதான் அந்தச்சூழல்.

"ஓம்நமசிவாய சிவாயநமஓம்" – வேளூர்திரு.க.சொக்கலிங்க ஓதுவார் இசைக்கிறார்; மெய்ம்மறந்து பஞ்சாட்சரத்தை இசை யுடன் ஓதுகின்றனர் அங்குவந்திருக்கும் அத்தனை அன்பர்களும். பக்தி - பாட்டிசையாகின்றது! ஆம்! அங்கேகூட்டுப்பிரார்த்தனை நடந்துகொண்டிருக்கின்றது.

இதோ, இன்னும் சில நொடிகளில் நமக்கு அருளுபதேசம் கிடைக்கப்போகிறது என்ற ஆவல் அன்பர்கள் நெஞ்சைத் தழுவிக்கிடக்கின்றது. திருத்தொண்டர் புராணச் சிந்தனை வரி சையில் இன்று இயற்பகை நாயனார் வரலாறு......

அடியேனது எண்ணப்பறவை சிறகடித்தது! " சைவசித் தாந்தசாத்திரக் கருத்துக்களை-வாழ்வியல்நெறியுடன் இயைந்து- உபதேசித்தாலே போதுமே; ஏன் இந்த அருள் வரலாறுகளைப் பேசவேண்டும்; படிக்கவேண்டும் " - இப்படி ஒரு சிந்தனை!

தெய்வத்தின் எதிரில் - மகான்கள் முன்னிலையில் - இந்தச் சராசரி மனிதனின் சந்தேகம் தீராமலாபோய்விடும்?

அருளுபதேசத் தொடக்கமே அப்படிதான் அமைந் திருந்தது!

மென்மையான சொற்கள்; இனிமையானகுரல்; ஸ்ரீலஸ்ரீ குரு மகாசந்நிதானத்தில் ஆசி வழங்குகின்றார்கள்.

" ஏதாவது ஒரு பற்றுக்கோடு வைத்துத்தான் சமயத்தைச் சிந்திக்கவேண்டும்; தத்துவங்களை உணரவேண்டும்; நாயன்மார் வரலாறுகளைக்கொண்டு சமயத்தத்துவங்களை அன்பர்கள் புரிந்துகொள்ளவேண்டும் "

அடியேனது ஐயம் அகல்கிறது; திருவாய் மலர்ந்து திவ்விய உபதேசத்தைத் தொடர்கிறார்கள்.

" சைவ சமயத்து அறுபத்துமூன்று அடியார்களைப்போல- அவர்கள் வரலாறுகளைப்போலப் பிற சமயத்தார்க்கும் அமைய வில்லை;பிறமொழியினர்க்கும் இல்லை;பிறநாடுகளிலும்இத்தகைய அமைப்புமுறையில் சிந்திக்க வாய்ப்பு இல்லை " என்று கால் கோள் அமைத்தவாறே சமய மாளிகையைக் கட்டத் தொடங் கினார்கள்.

" சமயம் என்பது தத்துவங்களைச் சொல்லிக்கொண்டே இருப்பதுமட்டும் அன்று; வாழ்ந்துகாட்டுவது! வாழ்க்கையுடன் ஒட்டிய சமயம் சைவம்! அறுபத்துமூவர் வாழ்ந்துகாட்டிய அடியார்கள் " - இக்கருத்தினைச் சான்றுகாட்டி விளக்கினார்கள்.

" சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல் "- செயற்கரும் செய்கை செய்த தீரர்களாய்க் குறிக்கோள் கொண்டவராய் வாழ்ந்த அடியார்கள் வரலாறுகள் நம் வாழ்க்கைக்கு வழிகாட்டும் "

அடியவன் மனம் அந்த அரைக்கண நேரத்தில் சிறிய வினா ஒன்றை எழுப்பிக் கொண்டது. 'குறிக்கோள் என்பது எந்த வயதில்... எப்பொழுது... வரவேண்டும்?'

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் உபதேசப்போக்கிலேயே மனத்தைத் தெளிவித்துவிடுகிறார்கள்.

"குறிக்கோள் இளமைக்காலத்திலேயே வந்துவிட வேண்டும்; குறிக்கோளும் நல்லதாய் இருக்கவேண்டும். தன் சக்திக்கு ஏற்றதாய்... இடையீடு இல்லாமல் செய்யக்கூடிய தாய் அமையவேண்டும்." "குறிக்கோள் இன்றி வாழ்வது அழிவுக்கு வழிகோலும்" அப்பர் சுவாமிகள் வாக்கினை ஆதார மாகக் காட்டி விளக்கியருளுகின்றார்கள். இதோ அந்தப்பாடல்.

"பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதைமார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்புவந்து
கோலனாய்க் கழிந்த நாளும் குறிக்கோள் இலாது கெட்டேன்
சேலுலாம் பழனவேலித் திருக்கொண்டீச் சரத்துளானே"

இளமை முதலே குறிக்கோளுடன் வாழ்ந்தவர்கள் நம் முன்னோர்கள்; அறுபத்துமூன்று நாயன்மார்களும் நல்ல குறிக் கோளுடன் வாழ்ந்து காட்டியவர்கள்; அவர்களுள் இயற்பகை நாயனார் வரலாறு சிந்தனையாக அமைந்தது.

"யாதும் ஒன்றும் என்பக்கல் உண்டாகில் அன்னது எம் பிரான் அடியவர் உடைமை"- என்பது புகார்நகரில் வாழ்ந்த வணிகர் குலச் செம்மலாகிய இயற்பகையார் குறிக்கோள். 'என்னிடத்தில் இருக்கும் பொருள் எதுவானாலும் அடியவர்க்கு, என்ற உயர்ந்த லட்சிய வாழ்க்கை:-

"இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே யுள"

என்னும் நெறி இயற்பகையார் வாழ்வில் இனிதே அமைந்தது.

"இயற்பகையார்கொள்கையிலிருந்து மாறாமல், மறுக்காமல் வாழ்ந்து காட்டுபவர்" என்னும் நிலையைக் காட்டும் பொருட்டுக் கடவுளே தூர்த்த வேடம் தாங்கிய வேதியராய் வருகின்றார்.

"தம் தொண்டர் மறுத வண்ணமும் காட்டுவான் வந்தார்" என்று சேக்கிழார் அருளிச்செய்கிறார்.

இயற்பகையாரை நாடிவந்த வேதியரோ, "உன் மனைவியை வேண்டி வந்தேன்" என்றார். இயற்பகையாரோ, 'இருக்கிற பொருளைக் கேட்டாரே' என்று மகிழ்ந்தார். "மெய்த்தவர்க்கு உனைக் கொடுத்தேன்" என மனைவியாரை நோக்கிக் கூறினார்.

மனைவியாரோ...மனங்கலங்கிப் பின் தெளிந்தார்! அப்படி மனம்கலங்கக்காரணம் என்ன? எப்படித் தெளிந்தார்; இப்படிக் கலங்கித்தெளிந்தவர் உளரோ? இதனை விளக்குமுகமாக ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் மிக அற்புதமாக விளக்கம் அருளினர் கள்.

"பார்வதி திருமணம். கயிலையில் பக்தர்கள், தேவர்கள் வெள்ளம்! வடதிசை தாழ்ந்தது! தென்திசை உயர்ந்தது! திருமணத்தைக்காணவந்தோர் கூட்டத்தால் இப்படிநிகழ்ந்தது!

பெருமான் கண்டார்; "அகத்தியரை அழை" என்ற ஆணை பிறந்தது; அகத்தியர் சிவபெருமானை வணங்கியவாரே எதிரே நின்ருர். "தெற்குத் திசையில் பொதியமலைக்குச் செல்க" என்ற கட்டளை பிறந்தது.

அகத்தியர் மனம் கலங்கினர் .. பெருமான் திருமணத்தைக் காண இயலாதே என்று! பின்னர் மனம் தெளிந்தார்.

அகத்தியர் மனங்கலங்கித் தெளிந்தநிலை போன்றதுதான் இயற்பகையார் மனைவியார் மனங்கலங்கித் தெளிந்தநிலை!

திருவாரூரில் ஸ்ரீகுருஞானசம்பந்தர் தமது ஆசாரியமூர்த்திகள் ஞானப்பிரகாசர் முன்னிலையில் நிற்கின்ருர். குருமூர்த்திகள் "தருமபுரம் சென்று திருமடம் அமைத்துச் சமய பரிபாலனம் புரிக' என அருளாணை இடுகிருர். குருஞானசம்பந்தரோ "அறிவைத் திரித்து, நின்பாதார விந்தம் அடையவல்ல நெறியைக் கொடுத்து நிறுத்தினை" 'இப்போது எப்படிப் பிரிவேன்' என்று அருளிப் பிரிய மனமின்றிக் கலங்கினர். ஆனல் அதே சமயத்தில் "கனக்கும் பொதிக்கும் எருதுக்கும் தன்இச்சை கண்டது உண்டோ" என்று எண்ணி, "குருவாணை வழி நடப்பதுதானே கடன்" எனத் தெளிந்தார். அப்படிக் கலங்கித் தெளிந்த நிலைதான்...இயற்பகையார் மனைவியார்நிலை!

சிவன் தன் அடியவர்களுக்குத் தீங்கு இழைப்பாரா? நல்ல குருநாதர் தன் சீடனுக்குத் தீங்குபுரிவாரோ? நல்ல கணவன் மனைவிக்குத் தீங்கு செய்வானே?

இப்படி மனம் நிம்மதி அடையும் வண்ணம் விளக்கம் அருளினர்கள்.

மனைவியார், அடியவருடன் புறப்பட்டார்; உற்ருர்உறவின ரால் தீங்கு நிகழா வண்ணம் பாதுகாவலாகச் செல்கின்ருர்

இயற்பகையார்; மனைவியாரையும் அளித்துக் காவலாகவும்செல் கின்ற இயற்பகையார் நிலை கண்டனர், உறவினர். போருக்கு எழுந்தனர்; இயற்பகையாரோ உறவினர் பலரைக் கொன்றார் உலகியல் அறத்துக்காக உழைத்துமாண்டார்கள் அந்தஉறவுக் காரர்கள்!

தொடர்ந்து காவலாகச் சென்றார் இயற்பகையார். திருச் சாய்க்காடு எனும் தலத்தை அடையும்போது அடியாரிடம் விடை பெற்றுத் திரும்பினார்; ஆனால் அங்கே " இயற்பகை முனிவா! ஓலம்; ஈண்டுநீ வருவாய் ஓலம் " என்ற ஓலக்குரல்; திரும்பி அங்குச் சென்றார் இயற்பகையார்.

வந்த அடியவர் அங்கே ஆண்டவனாய் அருங்காட்சி நல்கினார்; தம்முடன் என்றும் உறையும்பேற்றை ( சாயுச்சிய முத்தியை ) இயற்பகையாருக்கு அளித்தார். உலகியல் தர்மத் தைக் காத்த உறவினர்க்கு வானிடை இன்பம் அருளினார்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் இந்தப் புனித வரலாற்றுக் குள்ளே புதைந்து கிடக்கும் தத்துவத்தைத் தெளிவுபடுத்தி னார்கள்.

" உலகியல் தர்மத்தைக் காப்பதற்கு மக்கள் முன்வர வேண்டும்; அப்படிப்பட்டவர்களுக்கு ஆண்டவன் அருளு வான் "

இந்த இனிய தத்துவம் மட்டுமா அன்று அங்கு உபதேசிக் கப்பட்டது; நால்வகைவருணத்தார் நிலை, சாதிபேதமற்றசமயக் கடமைகள், இடையீடு இல்லாத இறையனுபவம் பெற நாம் மேற்கொள்ளவேண்டிய நெறிகள், ஆய்வுக்கருத்துக்கள் – இன் னும் பலவற்றையும் இலக்கியச் செறிவோடு – உலகியல் உதார ணங்களோடு – அந்த ஒன்றரைமணிநேரத்தில் உபதேசிக்கப் பெற்றது; நெஞ்சில் பதிந்தது; நிறைந்தது.

காலம் என்ற வேலியல்லவா கட்டுப்படுத்திவிட்டது! இருந்தால் என்ன? அடுத்த மாதம் முதல் ஞாயிறு எங்கேபோய் விடும்? அவன் அருள் இருந்தால் அன்றும் பெறுவோம் அருளுபதேசம்!

மங்கல வாழ்த்துடன் மனநிறைவுடன் வீடுதிரும்பினோம்.



The following particulars regarding the ownership of the GNANASAMBADAM the Monthly newspaper, are published as called for by Rule 8 of the Registration of News papers (Central Rules. 1956.)

## Form IV.

1. Place of puplication - DHARMAPURAM

2. Periodicity of its Publicstion - MONTHLY

3. Printer's and Publisher's Name - Sri V. RAMAIAHPILLAI, Manager, Dharmapuram Adhinam Mutt.

   Nationality - INDIAN

   Address - West Street, Dharmapuram, Mayuram P. O, 609 001

4. Editor's Name - Vidwan Srimath. RAMALINGA THAMBIRAN SWAMIGAL

   Nationality - INDIAN

   Address - Velur Devasthanam, Vaithiswarankoil. 609 117

5. Names & addresses of individuals who own tne Newspaper, own Partnerships or share holders holding more than one percent of the total Capital - His Holiness Sri-la-Sri SHANMUKA DESIKA GNANASAMBANDA PARAMACHARYA SWAMIGAL Avl, Tharmapuram Adhinam, Dharmapuram, Mayuram P. O. Tamilnadu

I. V. Ramaiah Pilli hereby declare that tha particulars given are true to best of my knowledge & belief.

(S-d) V. RAMAIAH PILLAI
Publisher.

Dated 28—3—1983.

## திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) திருக்கோயில்



மணிமுத்தாநதியுடன்
ஸ்ரீ பழமலைநாதர் திருக்கோயில் தோற்றம்.